


உ
கடவுள் துணை.

சந்திரமதி கலியாணமென்னும்

# சந்திரன் கெர்வபங்க நாடகம்.





சி. வே. மீனாக்ஷிசுந்தர முதலியார்

சகல சதந்தரமும் பெற்றுக்கொண்டு,

சென்னை - நுளை,

“பெரியநாயகியம்மன்” அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

---

[...ட்.] 1934. [விலை அணு 5.

உ

கடவுள் துணை.

சந்திரமதி கலியாண மென்னும்

# சந்திரன்
# கெர்வபங்க நாடகம்.

கொஞ்சிகுப்பம் துரைசாமி சமுஷ்டியார் மாணாக்கராகிய
தானம்பாளையம்-கோவிந்தசாமி நாயகர் கதையடேக்கித்தந்தபடி

கூடலூர் தாலுக்கா திருத்துரையூருக்கடுத்த கொறத்திகிராமம்
நா. நாகரானத்தின நாயகரும்
ஷை வை. வீரப் படையாக்ஷியாரும்
இயற்றியதை,

ஷையூர்
ரா. பாலகிருஷ்ணக் கண்டரால் திருத்தப்பட்டு,

ஷையூர்
பா. கோவிந்தசாமி செட்டியார் விருப்பத்தின்படி,

சி. வே. மீனாக்ஷிசுந்தர முதலியார்
சகல சுதந்தரமும் பெற்றுக்கொண்டு,

சென்னை - சூளை,

"பெரியநாயகியம்மன்" அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

 1934. [விலை அணா 5.



உ

கடவுள் துணை.

சந்திரமதி கலியாண மென்னும்

# சந்திரன் கெர்வபங்க நாடகம்.







விநாயகர் துதி.

சங்கரன் பாலனை தந்திமா முகவாபோற்றி
பொங்கமாய் பலதேவர்பாதம் புனிதனும் யான்பணிந்து
நங்கையாள் சந்திரமதிசரிதை நாடகம் பாடுதற்கு
சிங்கார கரிமுகத்தோன் சீரடி காப்புதானே.

திருச்சங்குராசன் கவி.

மகுடமுடிமன்னரெல்லாம் போற்றிதாழ
மானிலத்துஅரசரெல்லாம் அடிவணங்க
தடபடாபுஜகீர்த்தி தகதகென்ன
தங்கநவரத்தினமுடி பளபளென்ன
திடுகிடென்னவாத்தியங்க ளதிரபேரி
கீர்த்திபெற்றமந்திரிமார் அருகில்சூழ
திடத்துடனேஅயோத்திமா நகரையாளும்
திருச்சங்குராசனிதோ வருகின்றானே.

திருச்சங்குராசன் தரு.

தேசதேசத்தோர்போற்றும் ராசராசர்கள்மெச்சும்
திருச்சங்குராசன்வந்தேன் அயோத்தியாளும் திருச்

| | | | |
|---|---|---|---|
| | வாசவன்மலர்பாதத்தை | வணங்கிடும்குணசீலன் | |
| | காசினியோர்களெல்லாம் | கண்டுமகிழும்லோலன் | |
| சுரு | கச்சனிமாதர்கள் | சாமரைபோட | |
| | மெச்சவேமந்திரி | இருபுரம்நாட | தேச |
| | சித்திரமகுடமொலி | எத்திசையெங்கும்சொலிக்க | |
| | ரத்தினபதக்கம்ஆரம் | மார்பில்மின்னிவொலிக்க | |
| சுரு | ரம்பையர்பெண் | எனகண்டுமேவாட | |
| | சம்பிரமாவேதங்கள் | சங்கீர்தம்பாட | தேச |
| | ஆசையுடனேசெங்கோல் | அரசுபுரியும்தீரன் | |
| | நேசமுடனரிலோர் | கடமைவாங்கிடும்மாரன் | |
| சுரு | நித்தியம்திருமால் | பதமதைதுதிப்பவர் | |
| | நத்தியவுலகில் | நல்லபேரெடுப்பவர் | தேச |
| | கொறத்திநகரில்வாசன் | கூரும்வன்னியகுலேசன் | |
| | திரத்துடனேவீரப்பன் | செல்வன்பாடினன்தாசன் | |
| சுரு | சீர்பிழையிருந்தால் | பாரினில்புலவோர் | |
| | நேரதாசேயன்மேல் | நிருத்துவீர்கருத்ததை | தேச |

திருச்சங்குராசன் தேசவிசாரணை தரு.

மாதம்மும்மாரிமானிலம்செழிக்க மழைகளும்பெய்கின்றதாமந்திரி
ஆரியோர்வேதபாராயணம்செய்து அன்புடன்நடக்கின்றாராமந்திரி
ஆலயம்கோவில்ஆருகாலபூசை அனுதினம்நடக்கின்றதாமந்திரி
கற்புடையமாதர்கணவனைதெய்வமென்றுகருதியாநடக்கின்றாராமந்திரி

திருச்சங்குராசன் கவி.

மூன்றுசங்கவருஷம் முதன்மையாய்அயோத்தியாண்டும்
மன்றதைஅளந்தபாதம் மலரடிதுதித்துநாமும்
என்றுமேபுத்திரபாக்கியம் எனக்குமேயில்லாதாலே
சென்றுமேதபத்தைசெய்து சீருடன்வருவேன்மந்திரி.

திருச்சங்குராசன் வசனம்.

கேளும் மந்திரி! மூன்று சங்கவருஷம் அயோத்தியாபுரி பட்டணத்தை ஆண்டுவந்தும், நமக்குப்பிறகு பட்டணம் ஆள்வதற்கு பிள்ளை யில்லாததால் நான் தபத்தை செய்து புத்திரபாக்கியம் எம்பெருமானிடம் பெறவேண்டும் அதற்கு ஒரு யோசனை சொல்லும் மந்திரி.

மந்திரி வசனம்.

வந்தனம் வந்தனம் மகாராசனே தேவரீர் தபத்திற்குபோறது சரியல்ல, தாங்கள் அயோத்திக்கு அரசனாகயிருந்தும் இல்லாத்

தில் வேண்டிய தர்மத்தை செய்துவந்தால் புத்திரபாக்கியம் ஏற்படும் அல்லது யாகாதி ஓமத்தினுலும் ஏற்படும் அதை யோசனை செய்யவேண்டும் ராசனே.

திருச்சங்குராசன் புலம்பல் தரு.

அளவில்லாதருமத்தை அனேகமாசெய்தனேமந்திரிமாரே
அருமைசுதனில்லாமல் பெரும்பாவியாகினேன்மந்திரிமாரே
பிச்சைக்குவந்தோரை லச்சைகள்செய்தேனேமந்திரிமாரே
பிடித்துதள்ளியவரை அடித்துவதைசெய்தேனேமந்திரிமாரே
பாரினில்கோவிலை பாழடையச்செய்தேனேமந்திரிமாரே
பதரியேயென்மனம் சிதரியேவாடுரேன்மந்திரிமாரே
தபத்தினில்முனிவரை வருத்தம்வரவைதேனேமந்திரிமாரே
பெருத்தகோபத்தினல் பிள்ளையில்லாசெய்தாரோமந்திரிமாரே

திருச்சங்குராசன் கவி.

அருமையென்மந்திரிமாரே அரைகுவேன்வார்த்தையொன்று
உருகுதேயெந்தன்நெஞ்சம் உற்றுயோசிக்கும்போது
வருமைதான்வொன்றில்லாமல் வையோத்தியையாண்டுவாரும்
பெருமையாய்தபத்தைசெய்து பிள்ளைதன்கலிதீர்ப்பேனே.

திருச்சங்குராசன் வசனம்.

கேளும் மந்திரிமார்களே! நான் அரசுபுரிந்து வருபவதுபோல் அயோத்தியை ஆண்டுவாருங்கள் நான் தபத்திற்கு சென்று எனக்கு பின் அரசு ஆளுவதற்கு புத்திரன் பெற்றுவருகிறேன் மந்திரிமார்களே.

மந்திரி வசனம்.

ஆகா அப்படியே ஆண்டுவருகிரோம் சென்றுவாரும் ராசனே.

திருச்சங்குராசன் தேவாரம்.

அச்சுதாமுகுந்தாபோற்றி அகிலமேஅளந்தாய்போற்றி
பச்சமாமுகிலாய்போற்றி பங்கயக்கண்ணாய்போற்றி
நச்சரமிசைதுயின்ற நாதனேஅடியேன்போற்றி
இச்சையாயுனைபூசித்தேன் என்வரம்தருவாய்போற்றி.

திருச்சங்குராசன் வசனம்.

அச்சுதா முகுந்தா பரமபுருஷோத்தமா சங்குசக்கிரபாணியே வைகுண்டவாசா லக்ஷிமிநேசா ஏழையின் தபத்திற்கிரங்கி புத்திரபாக்கியம் தரவேண்டும் சுவாமி.

பொது வசனம்.

அகோதெப்படி யென்றால் திருச்சங்குமகாராசன் தபத்திற்குச் சென்று தபமியற்றி இருக்குங்காலையில் கன்னமாபுரியை ஆளப்பட்ட மதிதயராசன் கொலுவாக வருகிற விதங்காண்க.

மதிதயராசன் கவி.

சித்திரமகுடமின்ன செகமதில்புகழ்கெம்பீரன்
புத்தியில்வுயர்ந்தமந்திரி புகழ்ந்துமேயருகில்சூழ
வெத்தியாநாகசின்னம் மேளசல்லரிகள்பாட
பத்தியாமதிதயராசன் பார்சபைவருகின்றானே.

மதிதயராசன் தரு.

கன்னமாபுரியையாளும் மன்னவன்மதிதயராசன்
உன்னிதமாவந்துமேவினான் மந்திரிகள்சூழ
மன்னனும் கொலுவதாகினான்
நேத்தியாவாத்தியம்பாட பார்த்தவர்மனதுவாட
கீர்த்திப்பிரதாபனென்னவே மதிதயராசன்
கெம்பீரமாய் வந்துமேவினான்
கட்டிடும்பணிஆரங்கள் பட்டுடன்பளபளென்ன
வட்டவில்மதன்போலவே மங்கையர்கள்
வந்துமிருபுரம் சூழவே
கட்டாரிசிலைவாளேந்தி கடகம்தகதகென்ன
நெட்டுடன்நடைநடந்துமே அதிவேகமாய்
நேர்த்தியாக வந்துமேவினான் கன்ன

மதிதயராசன் கவி.

கலையதையுணர்ந்தமந்திரி கருத்ததைசொல்வேன்கேளும்
அலையுதேயெனதுநெஞ்சம் அருஞ்சுதனில்லாதாலே
உலையின்வாய்மெழுகுபோலே உருகுதேயெனதுஆவி
நிலையதைசொல்வதற்கு நேரிழைதனையழைப்பீர்.

மதிதயராசன் வசனம்.

கேளும் புத்தியில் மிகுந்த மந்திரிமார்களே என் துயரத்தை என்னென்று சொல்வேன் எனக்குபின் அரசுபுரிவதற்கு புத்திரன் இல்லாததால் வருத்தமடைகின்றேன் ஆதலால் எனது தேவியிடம் சிலவார்த்தை உரைக்கவேண்டும். மத்திராவதியை என்சமுகம் வரச் செய்வீர்.

பொது வசனம்.

அப்போது மதிதயராசன் இவ்விதம் மந்திரிகளிடம் வார்த்தைகள் உரைக்க அதைதெரிந்த மத்திராவதி தன் புருஷனைக் காணும்படி வருவது.

### மத்திராவதி கவி.

வஞ்சியர்புடைகள்சூழ வண்டணிகுழலால்மாது
சஞ்சலமில்லாமல்தான் சரிகைபட்டாடைபூண்டு
கொஞ்சியேநடைநடந்து குங்குமகளபம்பூசி
மஞ்சுடர்வதனரூபி மத்திராவதியுமேவருகின்றாளே.

### மத்திராவதி தரு.

மஞ்சுநிகர்க்குழலால் வஞ்சியர்புடைசூழ
மத்திராவதியிதோவந்தாள்மயிலதுபோலவேஷயிலாகநடந்து
மத்திராவதியிதோவந்தாள்
கொஞ்சும்கிளிபோல்பேசி கோவைக்கனியாள்நாசி
சுரு கூரும்பலபல சீரும்பெருகிட
பாரும்புகழ்பெற காரிழையானவள் மஞ்சு

சின்னநடையாளென்ன சித்திரமுகமும்துன்ன
மின்னும்சரிகைமேனி யென்னும்பிறகாசவாணி
சுரு மேனகையோயிவள் ஞானசிரோன்மணி
கானகக்குயில்மொழி கன்னியாள்வதனி மஞ்சு

முல்லையரும்புயிவள் பல்வரிசைவொயிலால்
நல்லதாதியர்கூடி ராகசங்கீர்தம்பாடி
சுரு ரத்தினபூஷண முத்துகள்மின்ன
நெத்தியில்கட்டிய சுட்டிகள்துன்ன மஞ்சு

பரமனருள்பாதத்தை திறமாய்துதிக்கும்மாது
வரம்தருமீசனை வள்ளலைமதிக்கும்சாது
சுரு வந்துமேசேடியர் எந்தனையழைக்க
சுந்திரமன்னவர் சொர்ப்படிநடக்க மஞ்சு

### மத்திராவதி சருணத் தரு.

அருமைசுந்திரமதனவொய்யாரா எனதுமாரா
அரிவைபணிந்தேன் கார்த்திடும்தீரா
சுரு அரும்புமல்லிகை முல்லையும்கொண்டு
பிரியமாகவே செய்தேனேதொண்டு
பிசகில்லாமலேஅழைத்தது ஏதுயெனக்குநன்றாய்
பிரியதெரிய அரிந்திடவோது அருமை

### மதிதயராசன் தரு.

கர்ப்பில்மிகுந்தஅர்ப்புதமானே என்சுந்தரரூபி
பொற்பாதத்தில் பணிந்ததால்தேனே

சுரு புத்தியில்மிகுந்த உத்தமிதேவி
இத்தலம்தனில் நித்தமும்வாழி
அருமைபுத்திரன்பெருமையாயில்லே நகரையாள
கருகுதேமனமிது வென்னுதொல்லே கர்ப்பி

மத்திராவதி கவி.

தொல்லேயும்வந்ததென்று துயரமும்பட்டாலென்ன
இல்லேயோயீசன்ருனும் யிருவரும்துதித்தோமானல்
எல்லேயையாள்வதற்கு இணையில்லாசுதனளிப்பார்
அல்லலேநீக்கிநாமும் அரசதையாளலாமே.

மத்திராவதி வசனம்.

கேளும் என் பிராணநாதா நமக்குபின் அரசாளுவதற்கு பிள்ளே யில்லே என்று துயரம் வேண்டாம். பரமசிவனே நாடி தபம்புரிந்தால் அவரால் புத்திரன் கிடைக்கும் அரசுபுரியலாம் துயரம் வேண்டாம் பிராணநாதா.

மதிதயராசன் கவி.

உத்தமியெனதுதேவி உரைப்பேனுனென்றுகேளாய்
புத்திரனில்லாபேர்கள் பெருத்ததோர்மலடியென்பார்
சித்தமாயரண்மனேயில் சீருடனிருந்தாயானல்
பத்தியாதபமேசெய்து புத்திரபாக்கியம்பெற்றுவாரேன்.

மதிதயராசன் வசனம்.

கேளும் என் பிராணநாயகி புத்திரனில்லாத பேர்களுக்கு சொர்க்கமில்லே என்று வேதவியாசர் சொல்லியிருக்க கேழ்வியானேன் நீ அரண்மனே வீற்றிரும் நான் தபத்திற்குச்சென்று புத்திரபாக்கியம் பெற்றுவாரேன் பெண்ணே.

மத்திராவதி தரு.

குத்தமாநினேக்கவேண்டாம் உத்தமரேயெந்தன்நாதா
கேளுமே மனம் தாளுமே
சித்தமெந்தன்மீதில்வைத்தால் பத்தினியாள்நானும்வாரேன்
நாளுமே சொல்வதை கேளுமே குத்தமா

மதிதயராசன் தரு.

நானும்வாரேனென்றுசொல்லி ஆணுவமாபேசவந்தாய்
யேர்க்குமா உலகில் மார்க்கமா
தேன்மொழியேமாதரசே தேசத்தோர்நகைப்பார்நம்மை
தெரிவையே எந்தன் அரிவையே நானும்

மத்திராவதி தரு.

மண்ணாசைவெருத்தவர்கள் மகாராசர்கோடியுண்டு
மன்னவா எந்தன் முன்னவா
என்னவிதமானவார்த்தை பன்னிபன்னியுரைத்தாலும்
யேசுருய் என்னே பேசுருய் மண்ணா

மதிதயராசன் தரு.

எழுத்துயஞ்சையும்மாரி பழத்தைபோல்வுள்கொண்டவர்
பெருத்தவர் எல்லாம் வெருத்தவர்
தழைத்துபேரின்பஆசை தையலேநமக்குண்டடி
தாருமே போரேன் பாருமே எழுத்து

மத்திராவதி கவி.

கூடவேவாரேனென்ருல் கோபமாய்பேசவந்தீர்
ஆண்டவர்தன்னைக்கண்டு அருள்வதுயென்னுளோ
போடியென்றெனைமிறட்டி பிடிவாதவார்த்தைசொன்னீர்
நாடியேயுன்பின்வாரேன் நவிலுவீர்பிராணநாதா.

மத்திராவதி வசனம்.

கேளும் பிராணநாதா தபத்திற்குப் போகின்றபடியால் அடியாள் வருவதற்கு சந்தேகம் என்ன இருக்கின்றது. பரமசிவனை நான் எப்போ காண்பது. தங்கள் கோபத்தை நிருத்தி, யான் பின்னல் வர கிருபைசெய்யும் நாதா.

மதிதயராசன் தரு.

காட்டுமதயானைப்பெண்ணே உன்மேல்
கர்ச்சித்துவருகுமேமுன்னே
கட்டுகதையெல்லாம் கன்னிநிருத்துமே
யெட்டியடிவைத்தால் யீபத்துநேருமே காட்

மத்திராவதி தரு.

உந்தனைபிரிந்திடலாமா நாதா
உலகத்தில்பேர்படபோமா
எந்தனைபோல்மாதர் யேளிதம்பேசிட
குந்தகமாகுமே கோதைப்பிரிந்திட உந்த

மதிதயராசன் தரு.

இட்டுப்போகத்தடையில்லையே மனம்
ஏங்கித்தவிக்குதேமெல்லியே
அட்டியில்லாமிருகம் அதும்பியேவந்திடும்
மட்டித்தனமாக மாதேநீபேசுராய் இட்டு

மத்திராவதி தரு.

காட்டில்பயங்கரம்சொல்கிராய் நாதா
கடுமையாயென்னிடம்விள்ளுராய்
நாட்டமானவார்த்தை நன்ருகயிருக்குது
மேட்டிமையாயிங்கே மெல்லியிருக்கேனே காட்

மதிதயராசன் கர்ந்தார்த்தம்.

இருக்கவேமாட்டேனென்ற யேந்திழையாளேகேளாய்
கிருக்குடன்பேசவந்தாய் கெர்வங்கள்கொண்டுநீயும்
திருக்குடன்சொன்னதெல்லாம் தெரிவையேகண்டேநானும்
உருக்கமாய் விடையுந்தந்தால்

தரு.

உத்தமன்செல்வேன் தபத்தைசெய்து
சித்தமாய்வருவேன்
அத்தியுரித்தயீசர் அவர்பாதமேதொழுது
பத்தியாபுத்திர பாக்கியம்பெற்றுவாரேன் உத்த

மத்திராவதி வசனம்.

ஆனல் சந்தோஷமாக சென்று பரமேஸ்வரனை நோக்கி தவம் புரிந்து புத்திரபாக்கியம் பெற்றுவாரும் நாதா.

மதிதயராசன் தேவாரம்.

திருபுரமெரித்தாய்போற்றி தேவனேபோற்றிபோற்றி
அருவுருவானய்போற்றி அம்பலவாணய்போற்றி
கருவதைவுருவதாக்கும் கர்த்தனேபோற்றிபோற்றி
சிருவனன்மதலேகேட்டேன் சேவடிபோற்றிபோற்றி.

பொது வசனம்.

அகோதெப்படி யென்றால் இந்தப்பிரகாரமாக மதிதய மகாராசன் புத்திரபாக்கியம் பெறவேண்டி கைலாசபதியை நோக்கி தபம்செய் கிறபோது வானுலோகத்தை ஆளப்பட்ட சந்திரதேவன் கொலுவாக வருகிற விதங்காண்க.

சந்திரன் கவி.

அண்டமண்டலங்களெல்லாம் அழகுடனொளிவைக்காட்டும்
கண்டுமேமனமகிழ்ந்து களித்திடதேவதேவன்
விண்டலதேவர்மெச்ச விரவினில்பூலோகம்நாடி
வண்டணிமாதர்வாழ்த்த வருகிரான்சந்திரதேவன்.

## சந்திரன் தரு.

சுந்திரனுனே வானுலோக சந்திரன்தானே
கந்தமலரணிந்தகன்னி சாமரைப்போட
கலகலவென்றுபல வாத்திமங்கள்முழங்க

சுரு
கனகரத்தின குடைகவிக்கவே
சனகசந்தணர் ஆசீர்வதிக்கவே சுந்

மகுடமின்ன யிருபுஜம் தகதகவென்ன
தகிடதத்தோமென்று தையலராலமேந்த
திகிடதித்திமியென்று திரமாய்கட்டியங்கூற

சுரு
தேவதேவரும் ஆவலாகவே
பாவலன்தனை பகர்ந்துபேசவே சுந்

மெத்தசந்தோஷம்கொண்டு மந்திரிசுத்திலும்சூழ
சத்தரிஷிகளில் அத்திரியும்தந்த
பத்தினிஅனுசுயை புத்திரனுனவர்

சுரு
பாசமாகவே தேசமன்னரும்
பேசயென்னிடம் ஆசைகொள்ளுவார் சுந்

பரமனை துதிப்பேன்தினம்தினம் பார்வலம்வருவோன்
அரியயன்ருத்திரன் ஆனந்தங்கொள்ளுவார்
சரியாதிக்குபாலர் சந்தோஷம்விள்ளுவார்

சுரு
சாரியாகவே நாடிபூலோகம்
பாரில்பார்க்கவே தேடியேகுரேன் சுந்

## சந்திரன் கவி

பக்குவமானமந்திரி பகருவேன்வார்த்தையொன்று
இக்கினில்சென்றுநாமும் திறமதாய்வனவேடிக்கை
தக்கவேபார்த்துயிப்போ தன்மையாய்வருகவேண்டும்
மிக்கவேமனமகிழ்ந்து மேன்மையாய்செல்லுவோமே.

## சந்திரன் தரு.

இந்தவனத்தின்பெருமைஎன்னவென்றெடுத்துரைப்பேன்
உன்னிதமலரைக்கண்டு இந்த

அந்திரதேவர்கள் யாவரால்யேர்ப்பட்டதோ
விந்தையையெடுத்துரைக்க விமலனுலாகாதே இந்த

ஆதிசேஷனுலாகுமோ இதின்பெருமையைசொல்ல
அருமையதாகுமே ஆதி

நதிக்கரையும்சோலையும் நாமேகண்டுகளிக்க
மதியுமயங்குதே மாயன்சிஷ்டிப்புதானே இந்த

சாதிமல்லிகைமுல்லையும் சலத்தில்தாமரைமலர்
பொருத்தமாயிருக்குதே சாதி
வாதுசெய்புதேமனம் வந்துயிதனைப்பார்க்க
ஏதுயிம்மலர்களை யெடுத்துசெல்லுவோம்வாராய் இந்த

தாகமதிகமாகுதே தடாகமதிலிறங்கி
விடாவைநாம்தீர்த்திடுவோம் தாக

ஆகாயிதற்குநிகர் அந்திரலோகத்திலில்லை
வாகாநாளையதினம் வந்துதீர்த்தமாடுவோம் இந்த

சந்திரன் கவி.

மட்டில்லாயெனதுமந்திரி மனதில்சந்தோஷமானேன்
அட்டியில்லாமல்வன அழகையும்பார்த்தபின்பு
திட்டமாமலர்கள்தன்னை என்தேவிக்குயெடுத்துகொண்டேன்
கிட்டியேவானுலோகம் கிளம்பிநாம்யேகுவோமே.

பொது வசனம்.

இவ்விதமாக சந்திரன் பூலோகம்சென்று வனவேடிக்கைப்பார்த்து பின்பு சந்திரனுக்கு தாகவிடாய் அதிகரித்து பார்க்க அவ்வனத்தில் கும்பமுனிவருடைய விந்தை வனத்தில் இருக்கும் குளத்தில் தாகம்தீர்ந்து பலவித புஷ்பங்களை கொய்து வனத்தையும் அதம் செய்துவிட்டு செல்ல, தினம் வழக்கப்படி ஸ்நானம்செய்ய கும்பமுனிவர் சபைக்குவாரார்.



கும்பமுனி கவி.

அம்பலத்தாடுமீசன் அடியிணை துதிகள்செய்து
சம்பிரமாய்ருத்திராக்ஷ மாலைதரித்தபூநூலிலங்க
உம்பர்கள்மகிழும்சீலர் உயர்புலியாசனமும்தெண்டும்
சம்பிரமாய்கும்பமுனி சபைதனில்வருகின்றாரே.

## கும்பமுனி தரு.

கும்பமுனிவரிதோவந்தேன் நல்லகோரிடும்பலகலை
தேவமுணர்ந்தவர்குரித்து தபநிலையதைபுரிந்தேன்
கின்பகின்னரர்களும் அன்பாயெனைமதித்து
இன்புருகுமிருதி ஏகும்மோக்ஷமார்க்கத்தை

சரு எந்தனின்மொழிபடி யாவருமரிவார்
சொந்தபதவியை சூக்ஷமாய்பெருவார் கும்ப

கனத்தமார்பினில்பூனூல் காவிகாம்பரம்பூண்டு
வனத்துசஞ்சாரியென்று வாழ்த்தியெனைக்கொண்டாட

சரு வாசவன்மைத்துனன் வள்ளலைதுதித்தேன்
பாசமதாகவே பரமனைமதித்தேன் கும்ப

காலில்பாதக்குறடு கையில்ஜெபமாலைக்கொண்டு
தாவிநடைநடந்து தாண்டவற்குசெய்வேன்தொண்டு

சரு தந்திரமந்திரம் விந்தையாய்கற்றேன்
சிந்தையில்திரு காலமரிந்தேன் கும்ப

பூங்காவனத்தில்சென்று புகக்ஷியாய்ஸ்நானம்செய்து
தீங்கொன்றும்வாராமல் தேடிநிஷ்டைசெய்வேனென்று

சரு தெரிந்தவரரிந்தவர் புரந்தரன்சபையில்
நெரந்தரமாகவே நேரதாநிற்பவர் கும்ப

## கும்பமுனி கவி.

என்னிடசிஷியாகேளாய் இன்றையதினத்தில்நாமும்
துன்னியபூங்காவுக்கேகி துரிதமாய்ஸ்நானம்செய்து
பன்னியசிவபூசைக்குபல புஷ்பமெடுத்துக்கொண்டு
தன்னியநாகநாமும் தடாகத்திற்கேகுவோமே.

## கும்பமுனி தரு.

பூங்காவனத்தைதுடர்ந்தார் கும்பமுனிவர்
பாங்காகவேநடந்தார்
மாங்கனிக்காகக்கந்தன் வலமாகவந்ததுபோல்
ஏங்காமனதுடனே வாங்காமலேநடந்தார் பூங்

இந்தவனத்தைக்கடந்து இருவர்களும்
நந்தவனமேபுகுந்து
சந்தியாவந்தனங்கள் விந்தையாய்முடிப்போமென்று
சிந்தையிலானந்தம்கொண்டு சந்தோஷவார்த்தைவிண்டு பூங்

மூன்றுவனமும்கடந்தோம் விந்தைவினத்தில்
வந்துமனதுகளித்தோம்

ஓங்காரத்தைநினைத்து உச்சரிக்கவேவேண்டும்
தங்கும்திருத்துழாவை தானேயெடுத்துக்கொள்வோம் பூங்

கும்பமுனி கொச்சகம்.

பார்த்தேன்பூங்காவனத்தை பழுதுவந்தகாரணமேன்
பூத்தமலர்களெல்லாம் போனவிதம்தெரியவில்லை
தீர்த்தம்கலங்கினதும் தேவர்களோ ஆனாலும்
நேர்த்தியாசாபமது நிச்சயமாய்தந்திடுவேன்.

கும்பமுனி வேறு தரு.

அடடாயிதுயென்னமோசம் ஆர்செய்தார்களிந்தநாசம்
துடரசாபம்தந்து துடிக்கவேசெய்கிறேன்
படடாயிக்கெதியென்று பாவியைசபிக்கிறேன் அட

பூங்காவைசுற்றியேபாருங்கள் எவனையும்பிடித்துவாருங்கள்
தாங்காதகோபத்தால் தரதலைப்பயல்களை
தீங்குசெய்தவனை தேடிப்பிடியுங்கள் அட

குளத்திலிறங்கியேவாருங்கள் கூவாமலிருப்பானோபாருங்கள்
சலத்தில்மறைந்தானோ சண்டாளபடுபாவி
பலத்தமலர்களை பாவியும்கொய்தானோ அட

தெய்வக்கன்னிகளோயரியேனே தெரியவில்லைமனம்புரியேனே
ஐயய்யோயவர்களை ஆணாகசெய்கிறேன்
பையல்களானாலும் பாவையாய்சபிக்கிறேன் அட

கும்பமுனி கவி.

அடடாயிம்மோசம்செய்த அனுகூலசத்திராதிதன்னை
துடரவேநாவால்சொன்னேன் துஷ்டனும்பெண்ணதாக
படருமூவுலகம்தன்னில் பார்த்தவர்நங்கையானால்
விடாதுஆணாகவேண்டும் விமலனாரரியச்சொன்னேன்.

ஆகா பளா பளா நன்றாகயிருக்கிறது. நமது பூங்காவில் உள்ள புஷ்பங்களைகொய்து தடாகத்தில் அதம்செய்த துஷ்டர்கள் நமது கண்ணுக்குப் புலப்படவில்லை இனி தேவர்களானாலும் தேவகன்னிகளானாலும்சரி, பூங்காவிலும் தடாகத்திலும் இரங்கினவர்களுக்கு ஆண் பெண்ணாகவும், பெண் ஆணாகவும் சாபம் தந்திருக்கின்றேன் இனி தபத்திற்கு செல்வோம் சிஷியர்களே.

பொது வசனம்.

இவ்விதமாக கும்பமுனிவர் தனது நந்தவனத்திலும் தடாகத்திலும் இரங்கினவர்க்கு சாபம்தந்து தபத்திற்கு செல்ல அப்போது சந்திரன் தேவியாகிய ரேவதி தன் புருஷனுடன் லீலைசெய்யும் பொருட்டு சபைக்கு வருவது.

### ரேவதி கவி.

அற்புதமலர்கள்சூடி அன்னம்போல்நடைநடந்து
பொற்புடன்பணிகள்பூண்டு பூவையுமலங்கரித்து
சொற்படிதாதிமார்கள் சூழ்ந்துமேகவரிவீச
கற்பினில்சிறந்தரேவதி கன்னியும்வருகின்றேனே.

### ரேவதி தரு.

அதிகசுந்தரமுள்ள ரதிபோல்யழகுடையாள்
அருவைரேவதியும்வந்தாள் சிங்காரரூபி அரு
வதனமுடையபதாதி வஞ்சியரருகில்சூழ
சுரு வாசபரிமளம் பூசியமாது
கூசியேகண்களும் குணமுள்ளசாது அதிக

மயில்போலளகபாரம் குயில்போல்தொனியுடையாள்
கயல்விழிமையும்தீட்டி கையில்கங்கணம்பூட்டி
சுரு கச்சிதசடையும் உச்சிதமாக
பச்சக்கல்ராக்கடி மெச்சவேயணிந்து அதிக

இடையிலணிந்தசேலை யெங்கும்பிறகாசிக்க
தடையில்லாதப்பொன்னூலை தாரணியெங்கும்சொலிக்க
சுரு தண்டைசெலம்பொலி கீதங்கள்பாட
வண்டணிகொண்டையில் செண்டுகளாட அதிக

கண்டசரபதக்கம் கழுத்திலாரங்கள்மின்ன
யெண்டிசைமாதரெல்லாம் எந்தனைக்கண்டுபன்ன
சுரு இங்கிர்தவார்த்தைகள் மங்கையாள்பேசி
சங்கையில்லாமலே சார்ந்துகைவீசி அதிக

### ரேவதி கொச்சகம்.

செங்கைசிலையழகர் சேடிகளாவரவில்லையே
யெங்கேதான்சென்றாரோ யேந்திழையானரியேன்
அங்கஜன்விடும்கணையால் அதிகதுன்பமாகுதம்மா
நங்கையாள்நித்திரைசெய்வேன் நற்கதவைசாத்துங்கடி.

### ரேவதி தரு.

நாதன்வரவில்லையே நழுகுதேயிடைதளர்ந்து
நங்கையேயிங்கிர்தம் கொங்கைரெண்டும்விம்புதடி
கொன்றையும்பூர்த்ததம்மா கொற்றவரைகாண்கிலேனே
கோகிலமாகிலும் கோதைகண்கள்தெரியலியே
மாசியும்வந்ததோடி மன்னன்வரவில்லையே
மஞ்சத்தினஞ்சுகம் வஞ்சியரேநித்திரைசெய்வேன்

ரேவதி வசனம்.

கேளும் தாதிகளா எனது நாதனை காண்கிலேன் எனக்கு அதிக காமவாதை பொருக்க முடியவில்லை நாதன் எப்போ வருவாரோ ஆனால் கதவை தாள்போட்டுவிட்டு மஞ்சத்தை அலங்கிர்தம் செய்யுங்கள் சற்றே நித்திரை செய்வேன் தாதிகளே.

சந்திரன் கவி.

வனத்தினிலழகைப்பார்த்து வந்துநேரமாச்சு
கனத்துடன்யரண்மனைக்கு கடுகவேசெல்லவேண்டும்
மனத்துடனெதிர்பார்ப்பாளே மஙகைரேவதியாள்தானும்
செனத்துடன்மலரைக்கொண்டு தேவிக்குதருகுவேனே.

சந்திரன் நொண்டிச்சிந்து தரு.

சந்திரதேவனும்நடந்தான் ரேவதியாளை
சந்தோஷமுடனேகாண சிந்தைமகிழ்ந்து
அந்திரலோகமீதில் பிரகாசிக்கும்
சுந்திரயழகுடைய விந்தைமாரன்போல்
காந்திபோல்மகுடமின்ன இடையினில்
கச்சையும்யிருக்கிக்கட்டி பக்ஷமுடனே
தாம்பூலம்தரித்துக்கொண்டு விந்தைவனத்தில்
தளிர்ந்தமலர்களைநான் யெடுத்துக்கொண்டு
தையலெந்தன்ரேவதிக்கு இந்தமலரை
தந்துமகிழ்ந்துலீலை புரிந்திடுவேன்
புளிகிதமிகவேக்கொண்டு வனத்தைவிட்டு
பூவையாளைகூடிடவே யோடியேவாரேன் (தந்தினம்)

சந்திரன் கொச்சகம்.

மாரனவன்வாதையினால் மங்கையரேவுனைதேடி
தீரனான்சந்திரனும் திகைதப்பிவாடுகிறேன்
சோரதனமாகசுந்திரமே நித்திரைசெய்தால்
போரவிதமெப்படியான் பொற்கொடியேகதவைதிற.

சந்திரன் தரு.

தாளைத்திறப்பாய்கண்ணாட்டி தையலரேவுந்தன்மீதில்
மையல்மிகக்கொண்டேனடி தாளை
வாலவயதுடைய வஞ்சியரேயங்கஜனால்
தாளவசமில்லையே தழுவசமயம்வாடி
சுரு தாவியேயிருவரும் மேவியேகூடி
பாவிமதன்கணை வாதையைத்தீரடி தாளைத்
இந்ததாமதம்யேதுக்கு யெத்தனைதரம்யழைச்சும்
சித்தமும்யிரங்கலையோ இந்த

வந்துவெகுநேரமா வருந்தியழைக்குறண்டி
சிந்தனைநினையாதே சேரதயைவையடி

சுரு சித்திரரேவதி பத்தினன்கதவை
நத்தியேபுடைத்துமே யுத்தமன்புகுந்தேன் தாளைத்

சந்திரன் வேறு தரு.

அன்னமேயென்சொர்னமே யருவையேயெழுந்திரு
கன்னியுனக்கென்னதுயில் பண்ணுவதையின்னதென்று
முத்தேயெந்தன்ரத்தினம் வுனைநத்தினேனெழுந்திரும்
சித்தஜனுல்மெத்தகளை யுற்றதையுரைத்தேனடி

ரேவதி தரு.

என்னடிதாதிகளா யின்னேரம்தாமதங்கள்
மன்னவருரோ மருவயழைக்குரூர்
யின்னுரென்றறிந்து யெந்தனுக்குசொல்லு என்ன

தாதி வசனம்.

ஐயா தாங்கள் யார்? என் ஊர்? என் பேர்? என் காவல் தப்பி உள்நுழைந்த காரணம் யாது? என் அரசி கோபிக்கின்ருள் தக்கபதில் சொல்லும்.

சந்திரன் வசனம்.

என் நாமதேயம் சந்திரன் ரேவதியின் புருஷனென்று தெரிவிப்பாய்.

தாதி வசனம்.

அம்மணி உன்புருஷன் சந்திரன் வந்திருக்கின்ருரம்மா.

ரேவதி சருணத் தரு.

நாதாவந்தனம் மலர் பாதாவந்தனம்
ஏதுயித்தனைநாளாய் யிங்குவராததேனோ
மாதுநான்செய்தகுற்றம் மன்னவாமனம்பொருப்பீர் நாதா

சந்திரன் தரு.

மாதேநீவாழி மகிழ்ந்துநீடூழி
கோதையரேயின்றையநாள் கொஞ்சும்கிளிவுனக்கானதால்
நாதனுனுந்தன்குற்றம் நன்மனதாபொருத்தனடி மாதே

சந்திரன் வசனம்

ஆசைக்கிசைந்த கண்ணுட்டி அடவியில் கிடைத்த புஷ்பத்தை உனக்கு சூட்டி தாமிசமில்லாமல் கண்ணுக்கு மைதீட்டி சாந்து சவ்வாதுகளை மேலெங்கும் பூட்டி தாம்பூலம் வாய்நிரைய தரித்துக் கொள்வாய் பேட்டி தழுவி யிதழ்முத்தம் கொடுப்பாய் கண்ணுட்டி.

ரேவதி தரு.

பஞ்சணை தனக்குசெல்வோம் மன்னுமன்னவரே
எந்தனுசைமன்னவரே மனதுக்கேற்றமன்னவரே
கொஞ்சிநாமும்கூடிடுவோம் பஞ்சணையில்தானே
கோதைக்கேற்றமாரா நாம் கூடிடுவோம்சோரா

சந்திரன் தரு.

சித்திரநிகர்த்தமுகமாதே யிருவருமாய்கோதே
சேருவோமிப்போதே
சித்தினியேமெத்தைமீதில் தத்திவிளையாடிடுவோம்
சிங்காரமயிலேவாடி சேர்ந்திடுவோம்கூடி

ரேவதி தரு.

கல்யாணம்செய்தநாளாய் நாதா அன்புக்குரியநீதா
அரிவைக்கேற்றபோதா
கண்டசுக மின்றுநாளில் யென்றுமில்லைதானே
கன்னியுமகிழ்ந்தேனே கருத்துக்கிசைந்தகோனே

சந்திரன் தரு.

இருவருமாய்ச்சேர்ந்ததுபோல்பெண்ணே இருந்ததில்லைமுன்னே
எப்போதுமில்லைசொன்னேன்
என்னருமைபெண்மணியே பின்னமில்லாபூலோகமே
போக்விடைதாரும் நோகாதேமனம்கூரும்

ரேவதி கவி.

அண்ணலேபூலோகத்தில் அதிசயம்கண்டதென்ன
வண்ணலேநேற்றியதினம் வனிதையாள்கனவுக்கண்டேன்
பெண்ணதாய்போகநீரும் பெரும்பழிக்கென்னசெய்வேன்
கண்ணுளாபோகவேண்டாம் கருத்ததையுரைத்தேன்நாதா.

சந்திரன் தரு.

சொர்ப்பனங்கண்டேனென்ருய் அற்பபுத்தியாலேபெண்மயிலே
கற்பகமேபதைகழலுவா யின்னதென்றுபெண்மயிலே

ரேவதி தரு.

கழலுவேன்நாதரே கங்கையில்மூழ்கிடபிராணநாதா-நீர்
கன்னியாளாகிட கனவுகள்கண்டேனே பிராணநாதா

சந்திரன் தரு.

என்னமதியாலேயிப்படிசொல்கிருய் பெண்மயிலேநான்
மன்னன்தேவனுச்சே என்னையாரென்செய்வார்பெண்மயிலே

ரேவதி தரு.

தேவதேவரென்று தெரியாமல்பேசுறீர் பிராணநாதா
ஆவலாஆண்பெண்ணும் ஐயோநீர்பெறகண்டேன்பிராணநாதா

சந்திரன் கந்தார்த்தம்.

புருஷநானென்வயற்றில் புனிதர்கள்பிறக்குமென்று
அரிவையே சொல்லவந்தாய்

சந்திரன் தரு.

அப்புறம்போடியெதிர்கில்லாதே தப்பிதமோடி
சொற்படிதேவர்கள் கர்ப்பணயிருக்கையில்
ஒப்புமோவுன்வார்த்தை இப்புவிதன்னிலே அப்பு

சந்திரன் கவி.

நேற்றியதினத்தில்நாமும் நேர்கண்டதடாகம்தன்னில்
தீர்த்தமுமாடவேண்டும் திடமதாய்யெண்ணம்கொண்டேன்
பூர்த்தியாய்திரேகம்தன்னை புகழ்பெறசுத்தம்செய்து
கீர்த்தியாய்வருகவேண்டும் கெடிபெறசெல்லுவேனே.

சந்திரன் தரு.

நந்தவனம்தன்னைதேடி விந்தையாய்பூலோகம்நாடி
சந்திரதேவனும்வந்தானே சந்தோஷமாக
சிந்தையிலானந்தம்கொண்டானே
சுந்திரவனம்கடந்து சொகுசாய்நடைநடந்து
விந்தைவனம்தன்னைதேடியே சந்திரதேவன்
வேடிக்கையாய் ஓடிவாரானே
பாடியேயன்னப்பக்ஷிகள் பறந்துவிளையாடுரதும்
ஓடிநாரையும்கொக்குகள் உலாவுரதுமொத்துபறந்தோடுதுபாராய்
நாடியேகிளிகளெல்லாம் நல்லபாஷைபேசுரதும்
நயந்துமயில்குயில்களும் இந்தவனத்தில்குவிந்துவிளையாடுதுசீராய்

சந்திரன் ஓரடி தரு.

நந்தவனம்சுற்றியே நாடியந்தசந்திரன்
விந்தையாசலத்தைகண்டு சந்தோஷமும்கொண்டான்
குந்தகமில்லாமலே குதித்துஸ்நானம்செய்யவே
அந்தவேளை முனிவர்சாபம் அப்பவேபெண்ணாகினன்

சந்திரப்பெண் கவி.

குளத்தினில்மூழ்கியானும் குளித்துமேயெழுந்தபோது
கணத்தினில்பெண்ணதாக காரணமரிகிலேனே
க்ஷணததினிலரிவேனென்று சந்தேகமிகவும்கொண்டு
கரத்தினிலாழியேந்தும் கர்த்தனேயென்னசெய்வேன்.

சந்திரப்பெண் வசனம்.

அய்யோ தெய்வமே! இந்த குளத்தில் ஸ்நானம் செய்ய நான் பெண்ணாக போனனே தெய்வமே.

சந்திரப்பெண் புலம்பல் தரு.

ஐயோயிந்தவிதிக்கி ஆளாகிவந்தேனையோ
ஆருடன்சொல்லப்போறேன் தெய்
செய்யாதகாரியத்தை செய்தேனேயான்பாவி
தீவினைக்கென்னசெய்வேன் தெய்
வந்தவிடந்தனில் யிந்தவிதிவரவும்
நொந்துவாடலாகினேன் தெய்
கந்தமலர்புஷ்பத்தை கையால்தொட்டதினால்
காரணமோயரியேன் தெய்
விந்தையானதீர்த்தத்தில் வந்துஸ்நானம்செய்ததாலே
விமலனேயானரியேன் தெய்
வானுலோகத்தைவிட்டுவந்தேன் பூலோகம்நாடி
வாதனைக்காளாகினேன் தெய்
எந்தவிதமாக யேகுவேன்வானுலோகம்
யேளிதம்சொல்லுவாரே தெய்
கண்ணில்வொருவர்காணேன் கஷ்டத்தைதவிர்த்திட
கர்த்தனேயென்னசெய்வேன் தெய்

பொது வசனம்.

இவ்விதமாக சந்திரதேவன் விந்தைவன தடாகத்தில் ஸ்நானம் செய்தவுடன் கும்பமுனிவர் சாபம் சந்திரனுக்கு பலித்துவிட அப்போது சந்திரன் பெண்வடிவாகி வானுலோகம் செல்வதற்கு நாணமடைந்து புலம்பிக்கொண்டிருக்க அப்போது திரிலோக சஞ்சாரியாகிய நாரதர் கொலுவாக வருகிறார்.

நாரதர் கவி.

காவிவஸ்திரமும்பூண்டு கரத்தினில்வீணையேந்தி
மேவிடும்திரிலோகங்கள் மேன்மைசஞ்சாரியென்று
ஆவியையடக்கியோக மமர்ந்திடும்தபசியான
பூவிளரதிசெயித்து புகழும்நாரதர்வந்தாரே.

நாரதர் தரு.

உலகம்தனிற்சிறந்தோன் கலகம்தனிர்பேர்வாய்ந்தோன்
உத்தமநாரதரிதோ வந்தேன் நல்ல
ஓதிடும்வேதபுராணங்க ளரிந்தோன்
சித்தர்களதனக்குமேல் பேர்வாய்ந்தோன்
சத்தியலோகமெல்லாம் சித்தமாகத்திரிவேன்

சரு நித்தியபிரம்மாசாரியும் நானே
சுத்தமாகமறை வோதிடுவேனே உலகம்

பத்தவுதாரன் தனைநானே இடைவிடாமல்
பணிந்தனுதினம் போற்றுவேனே
நித்தியகல்யாணனை சித்தமதில்மறவேன்
சுரு நேர்த்தியதாகவே பூர்த்தியாய்நானும்
கீர்த்தியதாகவே தோத்திரம்செப்வேன் உலகம்

பூலோகவிந்தைதனைக்கண்டு பொருமையுடன்
புரிவேன்கலகமதிர்சென்று
சூலானதந்தைதாயார் ஆகயிருந்தபோதும்
சுரு சுருக்கினிலிரிந்ததை யுரைத்திடாதிருந்தால்
பொருத்திடாசிரசது வெடித்துமேயுடையும் உலகம்

திக்கெல்லாம்சுற்றிமிகவந்தேன் ஒருவிதமும்
சிக்கில்லாமல்மனம் நொந்தேன்
பக்குவமாகவே பகருவாராரும்காணேன்
சுரு பாதையின்தடமதா நேரதாய்சென்றால்
வாதையில்கலகம் வந்தாலும்வாய்க்கும் உலகம்

நாரதர் கவி.

அண்டத்தையோரடியா யளர்ந்தவாமன்
அலைகடலில்பிரணையத்தில் யமர்ந்தநாதன்
வண்டரக்கர்தனைவதைத்த வண்ணன்யென்னும்
வாருதியிலமுர்தமது பகிர்ந்தநேயன்
உண்டுமிழ்ந்துவுலகமதை காக்கும்நேயன்
உம்பர்களைகாற்றிடும் கமலதூயன்
தண்டுளபம்தரித்த திருமாலேவுந்தன்
தாளிணையேயென்நாளும் போற்றிசெய்தேன்.

சந்திரன் புலம்பல் தரு.

ஆதிமூலமேயரும்பாவி யென்செய்வேன்
சுரு அருமையுடனெனை பிரியமுடனதாய்
உறியமனவிகள் பதறியழுவாளே ஆதி

நையுதேமனம் வையகம்தன்னிலே
சுரு நாரணாயிது யென்னகாரணம்
பூரணதயை புரிவாய்தருணமே ஆதி

பையரவசயனா யிந்தபாவிதுயரகற்றும்
சுரு பங்கமாகியே யிங்குதவிக்குறேன்
ரங்கனாயகா சங்கைதீருமே ஆதி

இங்கிர்தவடிவமும் எங்குதான்போச்சுதோ
சுரு எந்தன்துயரதை வந்துதீர்க்கவும்
சிந்தையில்லையோ நந்தநந்தனா ஆதி

நாரதன் கவி.

அடவியின்மார்க்கமாக அன்புடன்சொல்லும்வேளை
திடமதாய்கன்னியாரோ தேம்பியேயழுகலுற்றாள்
உடனதைசெவியில்கேட்டு உரிதியையரிவோமென்று
மடமயில்தன்னைப்பார்த்து மார்க்கமாய்கேழ்க்கின்றாரே.

நாரதர் வசனம்.

ஆகா இந்த குளக்கரையில் தனிமையாக அழுகின்ற பெண் யாரம்மா உனக்கு என்னகுறை நேரிட்டது நானே திரிலோக சஞ்சாரி நாரதன் வந்த ஆபத்தை என்னிடம் சொல்வாய் அம்மணி.

சந்திரப்பெண் தரு.

அய்யாநானென்னசொய்குவேன் எந்தன்
அருமையதுகுலைந்து சிருமைபடவுமானே அய்
நையுதேயெந்தனுள்ளம் நான்முகன்விதிப்படியோ
சுரு நற்குணசீலனே சற்குணலோலனே
கற்பினியானதை வொப்பியேவுரைப்பேன் அய்

நாரதர் தரு.

என்னகுறைதான்சொல்லுவாய் யேந்திழையெனக்கதை
சோர்ந்திடாமல்நீயும் என்ன
அன்னநடையுடைய அம்மணியுருகாதே
சுரு அரிவையேமனம் முருகிடாதிங்கே
தெரிவையேசங்கை தீர்ப்பனேயிங்கே என்ன

சந்திரப்பெண் தரு.

வனத்தபயோகிசாபமோ வந்ததுயென்குறை
நொந்துநானழுகுரேன் வனத்
இந்தனுள்வாடுகின்றேன் எந்தன்விதிதீரென்றேன்
சுரு சிந்தையதுமகிழ வுந்தனாலாகுமோ
வந்தவழியது பந்தமாயேகுவீர் வனத்

நாரதர் தரு.

யேகசொல்வதுஞாயமா எத்தனைவிதம்கேட்டாலும்
உற்றதைநீசொல்லவில்லை யேக
ஆகாயவாணிசாக்ஷி அரிவையேநீயுரைத்தால்
சுரு அரிந்திடபேரையும் தெரிந்திடசொல்லும்
புரிந்திடநகர்பேர் பூவையேவிள்ளும் யேக

சந்திரப்பெண் கவி.

நகரதைகேட்டஅய்யா நவிலுவேனுந்தனுக்கு
புகரவேநாமதேயம் பூவையாள்சந்திரனாகும்

பகரவேவானுவிட்டிங்கு பக்ஷமாய்ஸ்நானம்செய்ய
நிகரில்லாபெண்ணின்ரூபம் நிர்மலாவந்ததையோ.

நாரதர் கவி.

அப்பனேசந்திராயுனக்கு ஆபத்துவந்ததையோ
இப்பவேயிதனைதீர்க்க யெந்தனுலாகும்கண்டாய்
தப்பிதவுருவைநீக்க தனையனேவைகுந்தமேகி
கைப்பிடியாகச்சென்று கர்த்தனைகண்டுவாரேன்.

நாரதன் வசனம்.

கேளும் சந்திரா இந்த சாபத்தை தீர்க்க என்னல் முடியும் வைகுந்தம் சென்றுவாரேன் நீ பயப்படாதே சந்திரா.

சந்திரப்பெண் தரு.

பேர்பெற்றமுனிவரேகேளும் இந்த பெண்வடிவானதைநீரும்
ஆரிடத்திலாவது அரிவித்துவிடப்போறீர்
காரியத்தினில்சிந்தை கவனமாயிருக்கட்டும் பேர்

நாரதர் தரு.

சொற்படியேநடப்பேனம்மணி நீயும் சோர்ந்துதவிக்காதேபெண்மணி
வர்ப்புரிந்திடுகாதே வாசவன்சாக்ஷியாக
அற்புதபெண்மணி யாரிடமும்கூறவில்லை சொற்

பொது வசனம்.

இவ்விதமாக நாரதர் சந்திரப்பெண்ணிடத்தில் சொல்லிவிட்டு வைகுந்தம் செல்லும்போது அந்தசமையத்தில் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி கொலுவாக வருகிருர்.



கிருஷ்ணமூர்த்தி கவி.

ஆதியிலேயாலிலைமேல் அமர்ந்தநாதன்
அமரர்கட்க்குயமுதமது யளித்தபோதன்
வேதனையேயுந்திதனில் யீன்றநாதன்
விண்ணவர்க்கு திருவுருவாய்நின்றபாதன்

சூதனெனும்சுதரி சங்குதரித்தகையன்
சூரர்களைசம்மாரம் செய்தமெய்யன்
மாதுதிருலக்ஷிமி மார்பில்விளங்குமாயன்
வைகுந்தவாசர் கொலுவாகவருகின்றுரே.

கிருஷ்ணமூர்த்தி தரு.

அரவசேஷசயனன் திருவுருவானநாதன்
ஆதிநாராயணமூர்த்திவந்தேன் அண்டசராசரம்
எண்டிசையுண்டவர் சோதிசுடர்வடிவானின்றேன்
ஆகிரிதாயுகத்தாலய்யன்தனை யுண்டுசெய்தேன்
அளித்துநான்குவேதத்தை களித்துமனமகிழ்ந்தேன்
அரக்கனும்வேதம் அயனிடத்தில்பரிக்கவேசூதன்

சுரு அந்தமாய்மக்ஷ ரூபமுமானேன்
சிந்தைகலங்கிட சிதரிடகொன்றேன் அரவ

ஆழியில்தேவர்கள் யமுர்தம்கடையும்போது
ஆமையுருவமாகிநின்றேன் அந்தயிடத்தில்
யாவரும்கண்டு மகிழசென்றேன்
அரக்கர்வொருபுறமும் அமரர்வொருபுறமும்
இருகக்கடையும்போது பெருகவிஷமும்விழ
ஈசனும்கண்டார் கையிலைவாசனுமுண்டார்

சுரு யேங்கியபார்வதி கண்டதைபிடிக்க
சோங்கியபரமனும் திகைதப்பிதுடிக்க அரவ

கெட்டயெண்ணம்கொண்ட துஷ்டனிரனியனைகொல்ல
விட்டேன்பிரகலாதனை மதலையாக
விவரித்தேன் அரியின்போதனை
மட்டில்லாநரசிம்பமாகி மடையன்வுடல்கிழித்தேன்
அட்டில்லாயெமலோகம் யரக்கன்தன்னைசேர்த்தேன்
அன்பனைக்கார்த்தேன் அவனிடவாபத்தைதீர்த்தேன்

சுரு அண்டத்தையோரடி யளர்ந்துமேனின்றேன்
கண்டந்தமாபலி காக்ஷியும்தந்தேன் அரவ

கொரத்திநகரில்வாசன் கூறும்வன்னியகுலேசன்
குரித்துசம்புரிஷிகோத்திரனும் நாராயணசாமி
கோரும்தபத்தின்பாலனும்
கருத்தாம்நாகரத்தினம் கதையைநாடகம்செய்ய
பெருத்தக்கவிவாணர்கள்பொருத்துக்கொள்ளவேண்டினேன்
பாடினேன்நானே விஷ்ணுபக்தனும்தானே

சுரு பாரினில்தாசர்கள் பாதமும்துதிப்பவர்
கோரியேநாளுமே குணமதாமதிப்பவர் அரவ

பொது வசனம்.

இவ்விதமாக ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி கொலுவாக இருக்கின்ற போது நாரதர் வைகுந்தம் நாடிவருவது.

நாரதர் தரு.

வைகுந்தம்தன்னைநாடியே நாரதமுனி
வாராரேமிகவும்வோடியே
சந்திரப்பெண்சாபம்தீர்க்கவே அரிவாசுதேவனால்
சந்தோஷமாய்நடந்துவாராரே
என்னைக்கண்டுயெந்தன்தாதாவும் நகைப்புகொள்வார்
எங்கேவந்தாய்நாரதாயென்பார்
கண்டேனென்றுபுதுமையென்பேன் யதைவுனக்குசொல்ல
வந்தேனுலகிலுண்டோதான்தானே வைகு

நாரதர் வசனம்.

ஆரப்பா காவல்காரா சுவாமியிடத்தில் நாரதர் வந்தார் என்று சொல்.

காவலர் வசனம்.

சுவாமி நாரதர் வந்திருக்கின்றார் சுவாமி.

கிருஷ்ணமூர்த்தி வசனம்.

சந்தோஷம் நம்மிடம் வரச்செய்வீர் மந்திரி.

நாரதர் சருணத் தரு.

யானேசரணம்செய்தேன் தாதா
அடியேனைக்காற்றருள்வாய் போதா
தீனதயாபராவுன் திருவடிச்சேவந்தனம்
கானகம்சுற்றிவுனே கண்டிதெரிசிக்கவந்தேன் யானே

கிருஷ்ணமூர்த்தி தரு.

என்றும்சுகமாய்வாழ்வாய்நாரதா இப்போ
எங்குவந்தாய் என்னைத்தேடிசீரதா
நன்றேபூலோகம்தனில் நீசென்றவதிசயத்தை
இன்றுயெடுத்துரைப்பாய் கண்டுவந்ததிறத்தை என்

நாரதர் கவி.

என்னிடமொழியைக்கேளீர் யியல்புள்ளயெந்தன்தாதா
உன்னிடமுரைக்கவென்று வொருவருமரியாவண்ணம்
தன்னிடம்தவரிவேறோர் தானவர்தான்காண்பாரோ
துன்னியபூலோகத்தில் தோன்றிட்டவிந்தைதானே.

கிருஷ்ணமூர்த்தி கவி.

என்னரும்பவுத்திராநீயு மிதமதாயின்னதென்று
உன்னிதம்தன்னையிப்போ வுரைத்திடவேண்டும்நன்று
இந்நகர்விடுத்துநாமும் யேகுவோம்மிருவருந்தான்
பன்னியேயுரைசெய்வாயே நீபார்த்திடும்புதுமைதன்னை.

நாரதர் தரு.

விந்தையிலும்விந்தைதன்னையே சொல்ல
எந்தன்மனமதுவல்லையே
எந்தகாலத்திலும்நான் கண்டதில்லையே
வந்தவழியதில்பார்த்ததை சொல்லவே விந்தை

கிருஷ்ணமூர்த்தி தரு.

கண்டவதிசயம்நாரதா நீயும்
விண்டுவுரைப்பாயதைசீரதா
எண்டிசைதன்னிலும் யானறியாதது
உண்டோயதுதன்னை வுரைத்திடுவாய்முன்னே கண்ட

நாரதர் தரு.

உரைக்கவுமென்மனம்வல்லையே தாத்தா
உற்றவினோதத்தைசொல்லவே
கருக்குழிதனிலும்நீர் காணாததில்லையே
இருக்கும்பொருளது யான்கண்டுவந்தது உரை

கிருஷ்ணமூர்த்தி தரு.

எப்படியாகிலுமென்னிடமதை தப்பிதமில்லாமல்விண்டிடும்
சொற்படிநாரதா சூக்ஷங்கள்பேசாதே
கைப்பிடியாயதைகண்டிட செல்குவோம் எப்

நாரதர் தரு.

கண்டதைசொல்குவேன்நானேகவனமுடன்கேழ்ப்பீர்தானே
தண்டுழாபீதாம்பரம் தரித்தோனே
எண்டிசைபுவனத்தில் கண்டுவந்தேன்தானே கண்

கிருஷ்ணமூர்த்தி தரு.

தெண்டதுகொண்டிட்டமாமுனி அதை
தெரியவுரைப்பாய்தான்நீயினி
விண்டிடுமதிசயம் கொண்டுவந்ததைநீயும்
யெண்டிசைபுவனத்தில் சென்றுயாராய்குவோம் தெ

நாரதர் தரு.

கிட்டியவனமதில்பார்த்தேன் அங்கு பட்டமரமதுபூத்தேனே
நெட்டிட்டிருக்குதே ரெட்டைக்கிளையாக
பொட்டுப்பொட்டாயதில் சொட்டுதேபாலாக கிட்டி

கிருஷ்ணமூர்த்தி தரு.

பார்த்ததிதும்மெங்குமில்லையோ அவர்
பயித்தியக்காராவுன்தொல்லையோ
நேர்த்தியாகயிதைநீ கொண்டுவந்தாயோ
பூத்துகாய்த்தமரம்பட்டை போலில்லையோ பார்த்

நாரதர் தரு.

செத்தமரமதுகர்த்தனே அதில்
கொத்துடன்கனியதுகித்தனே
சித்தங்கொள்ளமனம் இத்தினத்தில்கண்டேன்
அததனேவும்மிடம் அறிவித்திடவந்தேன் செத்த

கிருஷ்ணமூர்த்தி தரு.

காய்த்தமரமதுமெய்தானு அதை
காண்பிப்பாய்வந்து இப்போதானுல்
வாய்த்தமரமதில் வடிகுதுபாலென்ருய்
சேர்ந்துயிருவரும் சென்றதைபார்க்கலாம் காய்த்

நாரதர் கவி.

பார்க்கலாமென்றுரைக்கும் பாரதையளந்தமாயா
மார்க்கமேபூலோகந்தான் மாயவாசெல்குவோமோ

கிருஷ்ணமூர்த்தி கவி.

சீக்கிரம்நாமும்செல்வோம் சிரப்பதைகாணவேண்டி
ஏற்கவேதேடிகொண்டு இன்பமாய்நடப்போம்வாருய்

கிருஷ்ணமூர்த்தி தரு.

எந்தவனம்தனிலே விந்தையதுகண்டிட
யேகிநடந்திடுவோம்நாரதனே நீயும்
என்முன்னே சென்றிடுவாய் சீராய்தானே எந்த

நாரதர் தரு.

எந்தன்பின்கூடவே பந்தமாய்வந்திடும்
சிந்தைகளித்திடுவோம் யெந்தன்சுவாமி
இந்தபூலோகமதில் வந்துநேமி எந்

கிருஷ்ணமூர்த்தி தரு.

என்னப்பாநாரதா மின்னலதின்வேகமாய்
ஏகிநடந்துவந்தோம்கானகத்தில் இன்னும்
இருக்கும்வழிதுலவோசொல் இக்ஷணத்தில் என்ன

நாரதர் தரு.

இல்லையில்லைவாருமே சொல்லுவேனுன் தூரமே
அல்லலில்லாமல் அரையோசனையேநீரும்
அதிதுருசாக அங்குசெல்வோம்வாரும் இல்லை

பொது வசனம்.

இவ்விதமாக கிருஷ்ணமூர்த்தியும் நாரதரும் கானகம்நாடி விந்தை தடாகம்தேடி வருகின்றபோது சந்திரப்பெண் புலம்புவது.

சந்திரப்பெண் புலம்பல் தரு.

வஞ்சமுருவதனல் நெஞ்சம்வுருகலானேன்
அஞ்சலென்றெனைக்காரும் நாராயணு
பஞ்சுபொதியில்வன்னிபட்ட விதம்போலானேன்
படுமோசம்யானறியேன் நாராயணு
என்தேவிரேவதியாள் யெனைப்போகவேண்டாமென்ருள்
இப்படிக்குவருமென்று அறியேனே
மாதவர்கோபாலா வைகுந்தவாசனே
வந்துயிந்தவேளைகாரும் நாராயணு
சந்திரனுருவழிந்து விந்தைபெண்வடிவானேன்
தயாபராயரிகோவிந்தா நாராயணு
கொஞ்சிகுலாவும்பெண்கள் ஐந்தோடிரண்டுமாதர்
குறைகொண்டழுதிடுவார் நாராயணு வஞ்ச

பொது வசனம்.

இவ்விதம் சந்திரப்பெண் புலம்பியிருக்க கிருஷ்ணமூர்த்தி நாரதனிடம் சொல்வது.

கிருஷ்ணமூர்த்தி தரு.

கானகம்தன்னிலே யாரோவொண்டியாக
கதரும்குரலதுகேட்குது அதைக்
கண்டுவருகவே நன்றுதடமதை
காணவேநாரதா யேகுவாய் கா

நாரதர் தரு.

யாராயிருந்தாலும் நமக்கென்னசுவாமிநீர்
நேராய்தடமதை செல்லுவீர்
வேரேதடமதை போகவும்வேண்டாமே
விமலனேசீக்கிரம் செல்லுவோம் யா

கிருஷ்ணமூர்த்தி தரு.

செல்லுவோமென்றுநீ சொல்லுவதழகல்ல
புல்லும்குறள்பெண்போல் கேழ்குதே நாம்
வல்லவராயிருந்தும் மெல்லியிடம்சென்று
தொல்லையகற்றிடுவோம் நாரதா செ

நாரதர் தரு.

கேட்டிடும்குறலது பெண்ணென்றல்நமக்கென்ன
நாட்டமுடனேவழிசெல்லுவீர் தாத்தாயந்த

வாட்டத்திலுன்னிட செவியைக்கொடுக்காமலே
வல்லவரேசொல்வீர் சீரதா சே

கிருஷ்ணமூர்த்தி தரு.

செல்லலாமோநாமும் புல்லரிவானாலும்
சொல்லில்பெரும்கீர்த்தியாகாதே அப்பா
மல்லுக்குள்நின்றாலும் தொல்லைதனையகற்றி
மறுபடியேகுவோம் நாரதா செ

நாரதர் தரு.

தீர்ப்பதுயென்றுமே தெரியாமல்பேசுறீர் நாம்
பார்க்கும்விடமது மாகுமேதாத்தா
கார்ப்பதுவுண்மைதான் பார்க்கும்மரமது
கவனம்மறந்துவிடும் மையனே தீர்

சந்திரப்பெண் தரு.

ஆலிலைமேல்பள்ளிகொள்ளும் ஆதிமூலமே-ஐயா
அடியாருளம்தன்னைக்காரும் ஆதிமூலமே

பாவலர்கள்போற்றுகின்ற ஆதிமூலமே-ஐயா
பாவையைக்கார்க்கொண்ணாதோ ஆதிமூலமே

கர்த்தனேவுனைநினைந்து ஆதிமூலமே-ஐயா
கதரிநான்வாடுகின்றேன் ஆதிமூலமே

சித்தம்யெந்தன்மீதில்வைத்து ஆதிமூலமே-ஐயா
தீவினையகற்றிடுவாய் ஆதிமூலமே ஆலிலை

கிருஷ்ணமூர்த்தி கவி.

எவ்விதமுரைத்திட்டாலும் யியலாதாவருகவென்று
அவ்விதவாத்திரத்தின் அழுதிடும்குரலைக்கேட்டு
செவ்விதக்கனியைக்காண சென்றாலும்கிட்டாதப்பா
இவ்விதமாகநாமிங் கிருந்திடலாமோசொல்வாய்.

நாரதர் கவி.

சொல்வதுயென்னசுவாமி சுருக்கினில்நீயும்சென்று
அல்லலைக்கண்டுவாரும் யரிவையின்துயரைக்கண்டு
நல்லதோர்கனியைக்காண நாழிகையாகுதிப்போ
வல்லநாரதனும்யான்தான் வழிபார்த்திருந்திடேனே.

நாரதர் வசனம்.

கேளும் சுவாமி அழுகுரல் கேட்டு அதைப்பார்ப்பதற்கு தங்களுக்கு ரொம்பவும் அபேக்ஷயானதால் சீக்கிரம் பார்வையிட்டு வாரும் நான் இந்தயிடமே யிருக்கின்றேன்.

கிருஷ்ணமூர்த்தி தரு.

அடவிதடம்தனில் யருமுனியைவிட்டுநடந்தார்
மடமயில்யழுங்குரல் மாயவரும்கேட்டுதுடர்ந்தார்
இடாதுதீரவே திடமதாய்நானங்குசெல்வேன்
கடினமாய்புலம்பிடும் கன்னியின்முன்னாகவந்தேன்

சந்திரப்பெண் தரு.

மதுசூதனவைகுந்தா வாமனயரிமுகுந்தா
வணங்கிநமஸ்கரித்தேன் வஞ்சியாரெனைக்காரும்
பதிபுகழ்பத்மநாபா பார்வனம்தனில்வந்தநான்
பாவையுருவைநீக்கும் பரந்தாமா

கிருஷ்ணமூர்த்தி கொச்சகம்.

பார்த்தனிந்தகன்னியரை பார்தனிலேயொருவரில்லை
பூர்த்தவனந்தனிலே பூவையரையான்காண்டேன்
வார்த்தைசொன்னால்கேட்பாளோ வஞ்சியரைலீலைசெய்ய
சேர்த்தவளையணைந்திட்டால் சேரலாம்சாலோகம்.

சந்திரப்பெண் கவி.

கன்னியின்வுருவமாகி கலங்கினனிருக்கும்போது
என்னையேசேருமென்று யியம்புரீர்மாயனேநீர்
நன்னயமுடையதேவா நாதனேநல்லதல்ல
பின்னையுமெவ்வாராமோ பேதையாளென்னசெய்வேன்

கிருஷ்ணமூர்த்தி தரு.

கார்மேகம்தனையொத்தகூந்தல் அடிகன்னியேவுந்தனழகை
யென்னவென்றுசொல்லுவேனன் கார்
வார்முகில்மேனியாளே வந்துயெந்தனைசேரும்

சுரு
வஞ்சியெந்தனுடனே கொஞ்சிவிளையாடுவாய்
ரஞ்சியிளமதியே துஞ்சிவுனக்குயிணை
ஆகாயிந்தப்புவியில் அரிவைபோல்கண்டதில்லை
யேகாந்தமாகசேர்ந்தால் யிதற்குயிணைவேரில்லை கார்

சந்திரப்பெண் தரு.

எந்தன்மேல்மோகம்கொள்ளவேண்டாம் யிப்படிநீர்
பேசவந்தீர்தப்பிதமாகவேநேரும் யெந்த
சொந்தப்பெண்டுகளுடன் சேர்ந்துமருவிடாமல்

சுரு
சொல்லும்வார்த்தைஎன்பு யெல்லாம்தெரியும்பின்பு
மல்லுசெய்யாதேவம்பு நான்வாடியிருக்கவன்போ
காமக்குரோதத்தாலே. கலங்கிதவிக்கவேண்டாம்
வாமனரூபனே வந்தவழியைப்பாரு எங்

கிருஷ்ணமூர்த்தி வேறு தரு.

எந்தன்முகம்பாரடி சந்திரவடிவழகி பெண்மயிலே
சந்திரமே காமன் தோதகம்செய்குரான் பெண்மயிலே

சந்திரப்பெண் தரு.

அய்யோயிதுயென்ன யனியாயவார்த்தைகள் வாசுதேவா
செய்யாதகாரியம் செய்யவந்தீரிப்போ வாசுதேவா.

கிருஷ்ணமூர்த்தி தரு.

உலகினில்செய்யாதகாரியமேதடி என்கிட்டவாடி
ஒத்துநாமிருவரும்சற்றேலீலைசெய்வோம் முத்தம்தாடி

சந்திரப்பெண் தரு.

முத்தம்தாருமென்றுயென்கிட்டவாதேநீர் எட்டினில்லும்
பத்தினியைத்தொட பகருதோசாஸ்திரம்சொல்லும்சொல்லும்

கிருஷ்ணமூர்த்தி ஓரடி கந்தார்த்தம்.

சாஸ்திரம்காமத்திற்கு தையலேபழுதொன்றில்லை
வாஸ்துவமாகச் சொன்னேன்.

கிருஷ்ணமூர்த்தி தரு.

வாடியெந்தனைசேரடி மோகம்தீரகூடிக்குலாவிநில்லடி
தாடியுன்கொங்கைதனை தையலேசுகம்தருவேன்
மோடிசெய்யாமலிதழை ஆடிலீலைப்புரிவேன் வாடி

பொது வசனம்.

இவ்விதமாக கிருஷ்ணமூர்த்தியானவர் சந்திரப்பெண்ணை சேர்ந்து அணைந்து சுகம்தர அப்போது கெர்ப்பமுண்டாகி சந்திரப் பெண் துயரப்படுவது.

சந்திரப்பெண் கவி.

கூடியேகலந்தபோது கோதையாள்கெர்ப்பமாகி
வாடியேசோகமுற்று வயரதுதுளைக்குதையோ
நாடியேயிவ்வனத்தில் நமக்குமோர்துணையுமில்லை
ஆடியேபரமன்தேவி யம்மணியென்னசெய்வேன்.

சந்திரப்பெண் தரு.

என்னசெய்வேன்யேதுசெய்வேன் யெந்தன்வயர்நோகுதையோ
அன்னங்களாயருங்குயில்காள் அரிவைதுயர்பார்த்தீர்களா
உன்னிதக்கிள்ளைகளா வுயர்பறக்கும்பக்ஷிகளா
அன்னிதத்திற்கென்னசெய்வேன் ஆறுமற்றபாவியானேன்
தூக்கியடிவைப்போமென்றால் துடைப்புண்ணாய்நோகுதையோ
பக்கம்வலிக்குதையோ பழுவெலும்பைநோகுதையோ

இக்கெதிக்கியென்னசெய்வேன் யென்தலையபன்விதியோ
செங்கண்மால்செய்சூதால் சேயிழையாள்வாடுகின்றேன் என்

சந்திரப்பெண் வேறு தரு.

பாலன்பிரந்தானம்மணி அழகுடையசீலன்பிரந்தானம்மணி
பாலன்பிரந்தானம்மா பரிதியின்வடிவைப்போல்
மேலும்பழகிதர்க்கு மாலுமினையாகாது பா
வானுலகெடுத்துசென்றால் என்வஞ்சியர்களென்னசொல்வார்
மானபங்களாகும் மாயனிடம்விட்டுசெல்வேன் பா

கிருஷ்ணமூர்த்தி கவி.

நேரமுமாகுதிப்போ நின்றுநாரதனும்பார்ப்பான்
பாரதின்வனத்தினில்சேர்ந்த பாவையைவிடுத்துசெல்வேன்
கோரியதிசையைநாடி கோளனும்வருவதற்குள்
காரிழைகண்ணில்காண கடுகெனநடக்கலுற்றேன்.

பொது வசனம்.

இவ்விதமாக கிருஷ்ணமூர்த்தி சந்திரப்பெண்ணை சேரவும் ஆண் குழந்தை பிறந்துவிட, சுவாமியானவர் அபிமானம் நேருமென்று ஒருவருக்கும் தெரியாமல் போய்விட வேண்டுமென்று நினைந்து போகிறபோது, நாரதர் பகவானைக் காணவருகிறார்.

நாரதன் தரு.

நாரணனைத்தேடியே நானும்வாரேன்வோடியே
நாடியே வோடியே நன்றாய்க்கீதம்பாடியே
எண்ணமும்முடிந்ததோ என்னமாய்நடந்ததோ
நடந்ததோ முடிந்ததோ நமதுயெண்ணம்வாய்ந்ததோ
இன்றங்குசெல்கிரேன் நின்றுபங்கம்செய்குரேன்
செல்கிரேன் வெல்கிரேன் சீதரனைக்கேழ்க்கிரேன்
இருவரையும்கண்டனர் இன்பமனதில்கொண்டனர்
கண்டனர் விண்டனர் கலகம்செய்யநின்றனர் நார

கிருஷ்ணமூர்த்தி தரு.

நாரதனும்இங்குவாரானே நம்மை நாணமிகபங்கம்செய்வானே
காரிழையாளேநான் கர்த்தனும்போய்வாரேன்
நாரியாளேயிங்கி நலமதாய்வீற்றிரு நார

சந்திரப்பென் தரு.

போவதழகல்லஅய்யனேஇந்தபூவைக்குபதில்சொல்லும்மெய்யனே
ஆவதழிவது ஆண்டவாவுன்னாலே
கோவையிதழொத்த குழந்தையைத்தூக்கிடு போ

நாரதர் தரு.

நல்லதுநல்லதுதாத்தாவே நாமும் நாடிவந்தபுஷ்பம்பூத்ததே
பொல்லாதவழிதனில் போகவேண்டாமென்றேன்
நில்லாமலேவந்து பிள்ளையுந்தந்தீரே நல்

கிருஷ்ணமூர்த்தி தரு.

பேரனேநீயெங்கும்சொல்லாதே அப்பா வேறெங்கும்நீசென்றுவில்லா
பாரெங்கும்பேர்வாய்ந்த பரமனரிந்தாலே [தே
கோரித்தங்கையிடம் குறவாகச்சொல்லுவார் பே

சந்திரப்பெண் தரு.

மாமுனியேயிதுதர்மமா என்னை மானபங்கம்செய்யவர்மமா
யேனுயெந்தன்மீதில் என்னதான்கோபமோ
கானகம்தன்னிலே கலங்கிடலாகுமா மா

நாரதர் தரு.

கலங்கிடவேண்டாம்நீ அம்மணி காரணம்சொல்கிறேன்பெண்மணி
துலங்கிடவனத்தினில் தோதையேவீற்றிரு
நலங்கிநீவாடாதே நான்சாபம்தீர்க்குரேன் கலங்

சந்திரப்பெண் தரு.

தீர்க்கிறதாகவேசொன்னீரேசுவாமி திருச்சுழல்தன்னிலேவிட்டீரே
மார்க்கமரியாமல்மாலும் சதிசெய்தார்
ஏர்க்குமோயெனைவிட்டு ஏகுரேனென்றாரே தீ

நாரதர் தரு.

ஏகுரேனென்றிடுமாயனை அம்மா பூவையேவிடாதேநேயனை
ஆகின்றகாரியம் அவனாலேயல்லவோ
தாபிரியம்சொன்னேன் தையலேபெண்மணி ஏ

கிருஷ்ணமூர்த்தி தரு.

அரிவையிடம்வந்துநாரதா அகப்பட்டுக்கொண்டேன்சீரதா
புரியவேயோசனை புகலுவாய்நீயிப்போ
தெரிவையாளைவிட்டு தேசிகாநான்செல்ல அ

நாரதர் தரு.

இதுவெகுபெரிதோ நாரணா இம்மாதைவிட்டுசெல்ல காரணா
புதுமையாய்தந்திரம் புகலுவாய்மாதுக்கு
மிதுவேதான்யோசனை யேகிவருகிரேன் இது

### சந்திரப்பெண் தரு.

யேகுரேனென்றீரே அய்யரே என்செய்யப்பேகிரேன் மெய்யரே
வேகுதேயென்னுள்ளம் வேதனைக்கென்செய்வேன்
போகுவதழகல்ல புனிதனேவிதம்சொல்வீர் யேகு

### நாரதர் கவி.

விதமதைசொல்வேனம்மா விபரமாயிருவருக்கும்
சுதன்தனையெடுத்துக்கொண்டு சுவாமிநீர்மறைவில்நில்லும்
அதிவிததுக்கத்தோடு அரிவையேநீயிருப்பாய்
கதிபெரும்சாபம்தீர கயிலையான்சென்றுவாரேன்.

### நாரதர் வசனம்.

கேளும் சுவாமி குழந்தையை யெடுத்துக்கொண்டு மறைவில் இரும், அம்மா நீ துயரமுற்றுக்கொண்டு தடாகக் கரையிலிரும், நான் கயிலையங்கிரிக்கு சென்றுவருகிரேன்.

### பொது வசனம்.

நாரதர் கயிலைநாடி வருகிறபோது பரமசிவன் கொலுவருவது.



### ஈஸ்பரன் கவி.

ஆலகாலவிஷந்தன்னை யுண்டநாதன்
அமரருக்கமுதளித்த கயிலைவாசன்
பாலன்மார்க்கண்டனுக்காய் கடையூர்தன்னில்
பாசம்விட்டுகாலனையே நோகச்செய்தோன்
வேலவனைசரவணையி லீன்றபோதன்
விமலனுமேகரத்தில்மழு தரித்தயீசன்
ஞாலமதில்புகழ்பெறவே ரிஷபமேறி
நர்ச்சபையில்பரமனுமே வருகின்றாரே.

### ஈஸ்பரன் கவி.

கங்காதரமூர்த்தியிதோவந்தார் அடியவர்க்கு
பொங்கமாய்வரங்கள் மிகதந்தார்
செங்கையில்மான்மழு தரித்தமிகவுல்லாசன்
சுரு தேசன் அன்பர்களுக்கு நேசன்
வெள்ளியங்கிரிவாசன் வாமபாகத்துள்ளாசன்

உயர்விடைமேல்பாசன் பக்தர்களிட
சித்தபடிக்கு முத்தியளிப்பேன்
கர்த்தனுமான நித்தியபோதன் கங்

கெங்கைத்தாங்கியபரநாதன் பகீரதற்கு
தங்காமலோடச் செய்தவேதன்
பங்கமில்லாராசர்கட்கு பாசமாய்முத்தியளித்தேன்

சுரு பக்ஷன் எல்லாவுயிர்க்கு மிஷ்டன் துதிக்காவிட்டால்
துஷ்டம்செய்பவரைநான் சிஷ்டன்நடத்தும்ருத்திய

தேவரும்யாவரும் பாவலர்மகிழ
வாமனன்மைத்துனர் வந்தனர்புகழ கங்

அரவாபரணம்பூண்ட ஐயன் இடைதனிலே
ஆசனம்புலிதோலணிந்த மெய்யன்
வரம்வாங்கியபத்மனை சிரமதையெரியச்செய்தேன்

சுரு சித்தமிகக்களித்தேன் முத்தன் வாணிச்சிபிட்டை
பித்தன் உண்டுகளித்தேன் பக்தன்சம்மந்தருக்கு

பக்திக்குமெச்சியே முத்தியளித்தேன்
சத்திக்குயிடபாகமும் தந்தேன் கங்

தேசம்புகழ்கொரத்திநகர்வாசன் வைத்திலிங்கர்
ஈசனருளைப்பெற்றதாசன்
பாசமாய்வீரப்பனும் பகரும்சரிதைபாட

சுரு பாருமிந்நாடகத்தின் சீரும் பிழையிருந்தால்
தேரும்புலவர்பாதம் காரும் மென்று துதித்தேன்

கர்த்தனையனுதினம் நித்தமும்பணிவார்
சித்தமகிழ்ந்துமே சீர்வரம்பெருவார் கங்

ஈஸ்பரர் கவி.

நல்லதுகேளாய்நந்தி நவிலுவேனின்றுநாளில்
தொல்லுலகெல்லாம்நாமும் சுகம்பெறபடியளர்ந்தோம்
வல்லவனுகநீயும் வகையதாய்காவல்செய்யும்
உல்லாசமாகயிப்போ வுத்தமாவீற்றிருப்போம்.

பொது வசனம்.

இவ்விதமாக பரமசிவன் கயிலேயில் கொலுவாக அமர்ந்திருக்க நாரதர் சிவனைநாடி வருவது.

நாரதர் தரு.

கயிலாயத்தைநாடிவாராரே நாரதமுனி
கனகசபையைதேடிவாராரே

காடுவனம்தன்னைத்தாண்டியே நாரதமுனி
கலகமிகவுமெண்ணிகொண்டுமே

ஆறுவோடைதன்னைத்தாண்டினர் நாரதமுனி
அன்புமிகுத்துசம்பிரமாய்வரரார்

சேரும்படிகன்னியிடத்தில் அந்தயீசனிடம்
செய்யாவிட்டால் முனிவனானல்ல

வெள்ளியம்பலம்தன்னைதேடியே நாரதமுனி
வேகமதாயோடிவாராரே

உள்ளபடிமுடிக்கயெண்ணியே நாரதமுனி
உரிதியாகநாடிவாராரே கயி

நாரதர் சருணத் தரு.

வந்தனம்புரிந்துநின்றேன் அய்யா யெனக்கு
வாழ்த்திவரமருளும் மெய்யா வந்

ஈஸ்பரர் தரு.

வாழிவாழிநாரதனே வாரும் நீயும்
வந்தசேதிகளென்ன கூறும் வ

நாரதர் தரு.

கூறுவேன்கானகத்தில் வொன்று புதுமை
குணமதாய்கண்டுவந்தேன் யின்று கூ

ஈஸ்பரர் தரு.

கண்டதைவிபரமாய் சொல்லு எனக்கு
கண்மணிநாரதனே விள்ளு க

நாரதர் தரு.

விள்ளுவேன்ஜெகதீசா கேளும் உனக்கு
விபரமதாகவே யிந்நாளும் வி

ஈஸ்பரர் தரு.

கள்ளமில்லாமலேநீயும் சொன்னல் அதை
கருத்துடன்கேட்கின்றேன் நானும் க

நாரதர் தரு.

கலகபுரியனென்று யென்னை யெந்த
காலமும்பேசுறீர் சொன்னேன் க

ஈஸ்பரர் தரு.

முனிவரில்பிரியமுள்ளோன் தானே வுன்னை
முகவாட்டம்செய்ததுண்டோ நானே மு

நாரதர் கவி.

புள்ளிமான்தரித்தகையா புலமதாய்சொல்கிரேன்யான்
தள்ளியேநடக்கொண்ணுது தயாபராகேட்கவேண்டும்

தெள்ளியேகனிகளிரெண்டும் திகட்டாதயமுர்தமாகும்
உள்ளதையுமக்குசொன்னேன் உத்தமாநடக்கலாமே.

ஈஸ்பரர் தரு.

மாமுனிவாராய்கனியை பார்க்கமகிழ்ந்துமேசீருய்
தாமதமில்லாமல் நேமமுடன்நடப்போம்
காமந்தபுதுமையை நலமதாய்கண்டிட மா

நாரதர் தரு.

சங்கராகேளும்நானும்மெத்த சந்தோஷம்நாளும்
பொங்கமதாகவே புகழ்ந்துகனியைபார்த்து
அங்கையேயானந்தம் யடையப்போரீர்வாரீர் சங்

ஈஸ்பரர் தரு.

முன்னதாய்நடப்பாய் யிவ்விடம்விட்டு
முகம்நோக்கிசெல்வாய்
இன்னவிடமென்று யெந்தனுக்குரைத்திடும்
பின்னகவேநானும் பிரியமாகவாரேன் முன்

நாரதர் தரு.

பாலதுவடியபட்டமரத்தில் பகருவேன்தெரிய
சீலமதாய்நானும் சேதியையுரைத்திட்டேன்
வேலவனையீன்ற விமலாகமலபாதா பா

சந்திரப்பெண் தரு.

என்தலைவிதியோயிந்தவனத்தில் யென்செய்வேன்சதியோ
முந்தியேசென்மத்தில் சிந்தனைசெய்தேனோ
வந்தவிதியினாலே நொந்துதவிக்கலானேன் என்

ஈஸ்பரர் தரு.

ரிஷியேநீகேளாயபயசத்தம் வழியினில்பாராய்
கசியகன்னிகுறல் காதினில்கேட்குதே
விஷயத்தையரிந்துநாம் விட்டுயப்புரம்செல்வோம் ரிஷி

நாரதர் தரு.

நாரியாளாரோநமக்கென்ன சாரியாசெல்வோம்
வேறுகவனங்கள் விமலனேநினைக்காதீர்
கோரியயிடத்திற்கு கூடிநடந்திடுவோம் நாரி

சந்திரப்பெண் தரு.

கெங்காதரமூர்த்தியே யிந்தவேளை வந்தருள்யித்ததியே
செங்கைசிலையழகன் மங்கையாளாகினேன்
அங்கமும்வாடி யலரிப்புலம்பலானேன் கெ

ஈஸ்வரர் கவி.

வல்லநாரதனேகேளாய் வஞ்சியாள்நம்மைக்கோரி
சொல்லியேயழுகும்சத்தம் துயரத்தையின்னதென்று
நல்லதுநாமும்சென்று நாயத்தையரியவேண்டும்
தொல்லையையகற்றவேண்டி யவள்துயரத்தைமாற்றுவோமே

நாரதர் கவி.

காமனையெரித்தயீசா கடவுளேவொருவிண்ணம்
தாமதம்கூடாதென்று தபமுனியானும்சொன்னேன்
வாமபாகமேதந்த வாசவாதடம்மறக்கும்
நேமமாய்நீர்தான்கண்டு நிலையதையரிந்துவாரும்.

ஈஸ்வரர் தரு.

முனிவனேவீற்றிரும் நான் தனிமையாகச்சென்று நாரதா நாரதா
கனிவானசேதியை கண்டு யிவ்விடம்வாரேன் சீரதா சீரதா
நாரதனைவிட்டு நலமுடன்யீசனும் நடந்தார் நடந்தார்
நாரியாளிருக்குமிட மதைக்காணவே துடர்ந்தார் துடர்ந்தார்
செங்காதராவென்று யெந்தனைநினைத்து புலம்ப புலம்ப
சங்கதிதெரியவே சங்கரன்நானங்கு திலும்ப திலும்ப முனி

சந்திரப்பெண் தரு.

வந்தனம்புரிந்திட்டேன் வுந்தனிருபாதம் அய்யனே அய்யனே
எந்தன்குரையகற்றும் சிந்தனையில்லாமல் மெய்யனே மெய்யனே

ஈஸ்பரர் சீசபத்தியம்.

மாதரசியிவளழகு மாணிக்கத்தீபமோ
மங்கைபோல்யெங்கிலும் கண்டதில்லை
தீதானமாரனும் திகைபடவாட்டுரான்
தேவியாளிவளென்ன தீபவொளிவோ
மீதானசுந்தரம் மேலானலோகத்தில்
மேகநிரகூந்தலும் மின்னலொளிவோ
சாதகமாகவே தையலாள்வார்த்தையும்
தயங்கவேசெய்யுதே சந்திரவொளிவோ.

முடுக்கு.

சரசமாய்லீலையும் புரிகுவாளோ
சங்கடவார்த்தையும் புகலுவாளோ
சங்கையில்லாமலே கூடினலோ
சாலோகபதவியும் சேரலாமே

ஈஸ்பரர் தரு.

கொஞ்சிமோகமிஞ்சி அடிரஞ்சிவந்தனே
மிஞ்சியேபுஷ்பக்கணையால் மேனியுமுருகுதே

செஞ்சொல்மறைபொருளே செயிழையேவாடுதே
வஞ்சகங்கள்செய்யவேண்டாம் வாதைமிகவாகுதே
பஞ்சமீதெனக்கென்றுமே அஞ்சகணைபூட்டுதே
பாவையெந்தன்மாமயிலே தேவையுனக்கில்லையோநான் கொ

பரிவானாமிருவரும் புரிவோம்சிற்றின்பமே
வருவாயித்தருணம் வஞ்சியரேநீயுமே
உரியமனவியாக வுந்தனைநான்கொண்டுமே
தருவேன்பெருவழிகள் தையலரையின்றுமே
தாவியெந்தன்மீதிலே ஆவிவைத்துசேர்ந்திடுவாய் கொ

சந்திரப்பெண் வேறு தரு.

அனியாயவார்த்தைபேசுநீர் யீசா பரமேசா
அடுக்குமோவுலகினில் யிடக்கதுசெய்திட அனி
வையகத்தோரெல்லாம் வசைய துபேசுவாரே
நைய்யுதேயெந்தனுள்ளம் நாணமுமாகுதே அனி

ஈஸ்பரர் தரு.

மாதேயெனைகூடுவாய் மனம்வைத்துயினம்வொத்து
மங்கையாளேசெங்கரும்பே இங்கிர்தமேகூடிடுவாய் மா
செங்கைசிலையழகி தங்கமேயருகில்வாராய்
கொங்கைஸ்தனங்கள்ரெண்டும் செங்கரம்தன்னில்தாருய் மா

சந்திரப்பெண் தரு.

தருவதழகல்லவே நீர்தயங்கிமனமயங்கி
தர்பராயுரைப்பது ஒப்புமோவுலகினில் தரு
பரவதன்பெண்ணிருக்க பாவைமேலிச்சைக்கொண்டீர்
உருகுதேயெந்தனெஞ்சம் உத்தமாசரியுமல்ல தரு

ஈஸ்பரர் தரு.

காமன்கணையால்வாடியே கண்பூர்த்துனைப்பார்த்து
கதரியேமனமதுகலங்கியே வாடுதேகாமன்கணை
வாய்மதம்பேசாமல் வந்துசுகம்கொடடி
எவ்விதம்வுரைத்தாலும் இனிவிடப்போறதில்லை காம

ஈஸ்பரர் கந்தார்த்தம் துண்டு.

எத்தனைவிதத்திலும் எவ்விதமுரைத்துபார்த்தேன்
உன்சித்தமும் மிதங்கவில்லை

தரு.

சேர்ந்துஅணைந்தேன்பாரடி என்பெண்ணேகண்ணே
சேர்ந்துஅணை பாய்ந்தமதன்கணையால் பரமன்லீலைபுரிந்தேன்
சேர்ந்துசந்திரப்பெண்ணாள் வாய்ந்துகெர்ப்பமுண்டாக சே

பொது வசனம்.

இவ்விதமாக பரமசிவன் சந்திரப்பெண்ணை பார்த்து மோகித்து சேர்ந்து அணைந்திருக்க கெர்ப்பமுண்டாகி சந்திரப்பெண் துயரப் படுவது.

சந்திரப்பெண் கவி.

ஆதிமாயவரேசுவாமியையோ நானென்னசெப்வேன்
வாதனையாகுதிப்போ வாசலக்ஷிமியாள்நேசா
சோதனைசெய்திட்டீரோ தோகையாள்கதரும்சத்தம்
காதினில்கேட்கலியோ கமலாலக்ஷிமியென்தாயே

சந்திரப்பெண் புலம்பல் தரு.

அம்மாலக்ஷிமியெந்தன்தாயே அரிவைப்படுந்துயரம்நீயே
எம்மாலாகுமோசொல்வாய்தாயே ஏந்திழையென்னசெய்வேன்நீயே
பெம்மானேபெண்சென்மங்கூடாது பிறந்தாலும்யிருக்கத்தகாது
நன்மையோயிவ்வேதனைநாதா நான்முகனேபிர்மதேவா அ

சந்திரப்பெண் கவி.

அன்னவன்கடாக்ஷத்தாலே அரிவையும்பிறந்தாளம்மா
முன்னமேயரியால்தானும் முதன்மைபாலனுமுதித்தான்
சொன்னநாரதரைக்காணேன் சுதருக்குநாமதேயம்
என்னமாய்வைக்கலாமோ யேந்திழைவிதியெவ்வாரோ.

பொது வசனம்.

இவ்விதமாக சந்திரப்பெண் கெர்ப்பவேதனைப்பட்டு பெண் குழந்தையைப் பெற்று நாரதரைக்காணோமென்று துயரப்படுகிற போது நாரதர் பரமனை தேடிவருகிறார்.

நாரதர் தரு.

சங்கரனைக்காணுமலே சப்தரிஷியிலொருவன்
செங்கரத்தில்வீணையேந்தியே நாரதரும்
சேதிகண்டரிய வாராரே சங்

பங்கப்படயீஸ்பரனை செங்கண்மாலுடனேசேர்ப்பேன்
தங்காமலேயெந்தன்சப்தம் முடிந்ததென்று
தைரியமாய் ஓடிவாரேனே பங்

அங்கயர்க்கன்னியாளும் அம்மணியாள்லக்ஷிமியும்
இங்கைநான்கொண்டுவரவே யோசனைசெய்து
இப்பவேநான் எண்ணம்கொண்டேனே அங்

கங்கையைமறைத்தவனும்கன்னியாள்சந்திரப்பெண்ணும்
கலந்திருக்குமிடத்தைகண்டேனே இந்தநாரதனும்
கலகம்செய்யயெண்ணம் கொண்டேனே கங்

ஈஸ்பரர் தரு.

யேகியேநாரதன்வாரானே யீரேழுலகமும்சொல்வானே
வேகமாய்நானிந்தவிடத்தை விட்டுச்செல்வேன்
நாகரீகமுள்ளநங்கையே வீற்றிரும் யே

சந்திரப்பெண் தரு.

ஏகுரேனென்கிரீர்நாதனே எனக்கென்னவழிசொல்லும்போதனே
பாகமானயிந்த பாவைக்குபதிலென்ன
நாகாபரணனே நங்கையாளென்செய்வேன் ஏகு

நாரதர் தரு.

ஓடாதேவோடாதேயீசரே உன்சேதியரிந்திட்டேன்வாசரே
யீடில்லாகனியது இவ்விடம்வாய்த்ததோ
சோடியாசேர்ந்திரா சுதனிபிறந்ததா ஓடா

ஈஸ்பரர் தரு.

நாரதாவுன்வாயைமூடடா நாரணனரிந்தாலேவாதடா
பாரில்தெரிந்தாலே பரிகாசம்செய்குவார்
சீராகவப்புரம் செல்குவோம்நீவாடா நார

நாரதர் தரு.

இப்படிசெய்திடலாகுமா தாத்தாயென்பதுங்குகின்றாய்வாருமே
தப்பிலிவுங்கள்போல் யித்தரணியிலில்லையே
கைப்பிடிவிடாதே காட்டுரேன்தொல்லையே இப்

கிருஷ்ணமூர்த்தி தரு.

அப்பப்பாநாரதாவேதனே அருமையாய்கேட்கிரேன்யோசனே
இப்பாலன்தன்னையே எவ்விதம்சேர்க்கலாம்
தப்பாமலேயெனக்கு தனையனேசொல்லுவாய் அப்

நாரதர் தரு.

அம்மணிவிடாதேயிவர்களை யீசரவரிடம்தந்துபுதல்வியை
நன்மையதாகவே நானேகிவருகிரேன்
வண்மையானசாபம் வந்துமேதீர்க்குரேன் அம்

சந்திரப்பெண் தரு.

மாலும்சிவனும்வந்துமே யின்றுமருவிப்புதல்வரைதந்துமே
தீதுகள்செய்தாரே தேவராகயிருந்தும்
ஏதேதுசொன்னாலும் யினிசும்மாவிடுவேனோ மா

சந்திரப்பெண் கவி.

தேடிவந்தென்னைநீங்கள் தீங்குகள்நினைத்தபாவி
கூடியேயிருவர்தானும் குற்றங்கள்செய்வீரானால்

நாடியேபெண்கள்பார்த்து நகைக்கயிச்சபையில்தானும்
வாடிடசெய்வேன்யானும் மடிபிடித்திழுப்பேன்பாராய்.

கிருஷ்ணமூர்த்தி தரு.

அருமையுள்ளமைத்துனரே பிரியமானகைலாசரே
அரிவையாளும்பிடித்தகாரணம் அதையெனக்கு
விபரமதாய் உரைப்பீர்பூரணம் அ

ஈஸ்பரர் தரு.

இன்பமுள்ளமைத்துனரே யினிவைகுந்தவாசகரே
துன்பப்படகன்னியாளுமே வுந்தனைமாது
தொட்டிழுத்த தென்னகாரணம் இன்

கிருஷ்ணமூர்த்தி தரு.

என்னமதிவுந்தனுக்கு என்னுடைய்மைத்துனரே
முன்னமேனுன்சுதனையீன்றனே கன்னியிடத்தில்
பொய்க்குழலாள் சொல்லவில்லையா என்

ஈஸ்பரர் தரு.

புத்திவுனக்கில்லையோதான் புதல்விதனையீன்றெடுத்தேன்
பேதையாளும்சொல்லவில்லையா அதைநீநன்றாய்
மாயவரேகேட்க தொல்லையா புத்

சந்திரப்பெண் தரு.

யெத்தனைநாள்காத்திருந்தீர் யிந்தசதிமோசம்செய்ய
பித்தரேவுமக்கழகா பேதையாளே
ஒத்துமைவுலகில் கொள்வாரா யெத்

நாரதர் தரு.

அத்திமுகனையீன்ற ஆண்டவாகைலைவாசா
கர்த்தனே வைகுந்தவாசரே கமலபாதா
கன்னியாளுக் கென்னுசொல்கிறீர் அத்

நாரதர் கவி.

சத்தியவாசனீன்றதனையனும் நாரதன்தான்
முத்தியையளிக்கும்தேவர் முழித்திடும்வேளைதன்னில்
உத்தமிலக்ஷிமியாளை வுகந்துநான்யழைத்துயின்று
கர்த்தனேகலகம்செய்ய கடிகியேநடந்திட்டானே.

பொது வசனம்.

இவ்விதமாக நாரதன் மூவரையும் இவ்விடம் இருக்கச்செய்து விட்டு லக்ஷிமியை நாடிச்செல்ல அப்போது லக்ஷிமி சபைக்கு வருவது.




லக்ஷிமி கவி.

உச்சிதபணிகள்பூண்டு வுத்தமியானமாது
கச்சிதவார்த்தைபேசி கன்னியருடனேகூடி
நச்சரவம்தனில்நடித்த நாதனைக்காணவேண்டி
லக்ஷிமியானமாது நாயகிவருகின்றாளே.

லக்ஷிமி தரு.

பச்சைமுகில்வதனன் அச்சுதன் தனக்குபாரி
பாவைலக்ஷிமியும்வந்தேன் உலகமாதா பா

கச்சனிமாதர்கள் கன்னியர்புடைசூழ
உச்சிதமாகவே வொயிலாநடைநடந்து
சுரு உத்தமியாகிய பத்தினிமாது
யித்தலம்தன்னிலே கர்த்தனை துதிப்பவள் பச்

அரும்புமுல்லையைப்போல நெருங்கும்பல்வரிசைகள்
அகிலகாரணியும்வந்தேன் சபைமுன்பாக அகில

அரனார்தனக்குதங்கை அச்சுதனவர்க்குமங்கை
சுரு அங்கமதுதனில் அத்தரும்பூசியே
இங்கிர்தமாதியர் வார்த்தைகள்பேசியே பச்

முத்துசரிகைசேலை ரத்தினப்பதக்கமின்ன
மெல்லிசிரோன்மணிவந்தாள் மிகவடிவாய் மெ

சுத்துவொட்டியானமும் சிருத்தயிடையில்பூண்டு
சுரு சுந்திரமானவள் கந்தமும்பூசி
விந்தையாக சிலவார்த்தைகள்பேசி பச்

நாதன்காக்ஷிகொடுக்க போனவரைக்காணாமல்
நலிந்துமனதுவாடியே அவரைத்தேடி நலி

சாயலரியவேண்டி வாதனையரியவந்தேன்
சரு வண்டணிமாது கெண்டையின்விழியாள்
புண்டரிகனே கண்டுமேவாட பச்

லக்ஷிமி கவி.

சேயிழையென்சேடிகளா யென்னசெய்வேன்
செங்கண்மால்சென்றவரைக் காணேனம்மா
ஆவலாயடியாருக்கு முத்திமோக்ஷம்
அளித்திடநின்றாரோ அறியேனம்மா
பாவியெந்தயறக்கரிடம் அகப்பட்டாரோ
பாவையரேயின்னதென்று புரியனம்மா
காவலெந்தன்சேடிகளா யிதற்குத்தாரம்
கண்டறிந்துயோசனையா சொல்லுவீரே.

நாரதர் தரு.

திரிலோகசஞ்சாரி பிரியவைகுந்தம்நாடி
கரியமால்தேவிதன்னையே காணவென்றுமே
பரிவாய் நடக்கலுற்றாரே திரி
திருமால்நினைத்திட நான்சரியாவுரைத்திட
கருதிநடந்துவாரேனே வைகுந்தம்நாடி
கருத்தினில் எண்ணங்கொண்டனே திரி
வந்தேனன்வைகுந்தம் குந்தகமில்லாமலே
எந்தன்மொழியாலுரைத்து லக்ஷிமியை
விந்தைவனம் ஏகச்செய்குரேன் திரி
சந்திரப்பெண்ணும் இந்தநேர்லக்ஷிமியும்
சுவாமியும்பத்மநாபனும் அவ்விடத்தில்
சண்டையிடவே செய்குரேன் திரி

நாரதர் சருணத் தரு.

பாட்டியரேவுந்தனிருபாதம் பணிந்தேனிந்தநாரதனும்நீதம்
பல-பரவசமாய்முரகரியை அருமையுடன்தேடிவந்தேன்
பகரும் பாட்டி புகலும் பாட்

லக்ஷிமி தரு.

தேடியென்பாதம்பணிந்தபேரா திருவுலகில்வாழ்ந்திருப்பாய்சீராய்
நீயும்-தேடியேயிவ்விடம்நாடி வோடியிங்குவந்ததென்ன
விள்ளும் பதில் சொல்லும் தேடி

நாரதர் தரு.

சொல்லுவேன் கேளுமம்மாதாயே சுவாமியைப்பார்க்கவந்தேன்நீயே
காக்ஷி-சகாரியேந்தவோரை பொங்கமாய்பணியவந்தேன்
மங்கை அவர் யெங்கே சொல்

லக்ஷிமி தரு.

எங்கேயென்றுகேட்கவந்தாய்நாரதா என்னமூட்டைகொண்டுவந்தாய்
என்-அங்கமும்பதருதடா பங்கயன்புதல்வனுன [சிரதாய்
போரா சொல்லும் சீராய் எங்

நாரதர் தரு.

ஒன்றுமூட்டையில்லையம்மாள் தாயே
உற்றதைசொல்லுவேன்கேளாய் நீயே
அந்த-மன்றதையளர்ந்தபாதன் மாதுடனேகூடிருக்க
கண்டேன் உனக்கதை விண்டேன் ஒன்று

லக்ஷிமி தரு.

அப்படிசெய்பவர்தானில்லையே அடுக்குமோவுலகுக்குதொல்லையோ
அடா-எப்படிநீவுரைத்தாலும் ஒப்புவேனோவுந்தன்வார்த்தை
போடா குடி கேடா அப்

நாரதர் தரு.

கேட்கேனென்றுசொல்லவேண்டாமம்மணி அங்கு
கிட்டநின்றுபார்த்திடலாம்நண்மணி புத்தி
வாடுதேமனமெனக்கு வாதனையைசொல்வதற்கு
வாராய் வந்து பாராய் கெட்

லக்ஷிமி தரு.

பாருமென்றுசொல்லவந்தாய் நாரதா
பக்தருக்குகாக்ஷிதர சிரதா-அவர்
போனவர்மூன்றுதினமா யேனோயிங்குவரவில்லை
அரியேன் வொன்றும் தெரியேன் பாரு

நாரதர் தரு.

பாரில்யாரோ கன்னியிடம்கூடி
பாலகனைபெற்றாரம்மா நாடி-அவர்
வேரேயெந்தசாதியா கோரியகுடும்பசேர்க்கை
லாமா வரப் போமா பாய்

லக்ஷிமி கவி.

குடும்பத்தில்சேர்ப்பேனென்று கோதையாள்நினைப்பேனோதான்
இடும்புதான்செய்திட்டாளோ யேந்திழையரியேனம்மா
கடுமையாய்சென்றுநாமும் கர்த்தரையழைக்கவேண்டும்
படுமோசம்தனையரிய பாலனேயேகுவோமே.

நாரதர் தரு.

உத்தமியேயெந்தன்பாட்டி சித்தமாயிருவர்கூடி
யேகுவோம் யங்குபோகுவோம்

சித்தினியேகாட்டுகிறேன் யித்தினத்திருந்தனுக்கு
சீராய் வாரும் நேராய் உத்

லக்ஷிமி தரு.

இந்தவழியெவ்வளவோ நொந்துமனம்வாடுகிறேன்
வாராய் யெந்தன் பேராய்
எந்தவிதமாகயவர் யந்தயிடம்சென்றதைநான்
கேட்போம் நாமும் பார்ப்போம் இந்த

நாரதர் தரு.

பார்மோமென்றுசொன்னதாயே யேற்குமோயிதுவுலகில்
பார்த்தியா வெகு நேர்த்தியா
கீர்த்தியானவைகுந்தனும் கோத்திரம்தனைகெடுத்தார்
பாருமே நன்ராய் நீருமே பார்

லக்ஷிமி தரு.

கெட்டவெண்ணம்கொண்டவரை கிட்டநின்றுபார்த்திடுவேன்
பாலனே குண சீலனே
பட்டிசிரிக்கியாளை நெட்டியடித்திடுவேன்
ஓடியே அவளை சாடியே கெ

நாரதர் கவி.

மதுசூதன்தன்னைப்பாரும் மாதுடன்கூடிக்கொண்டு
வதுவையும்நடந்தாப்போல வாசவன்மகிழ்சியாக
சதிருடன்புதல்வரோடு சரசமாய்வீற்றிருக்க
பதுமணிநீயும்சென்று பரந்தாமனையழைத்துவாராய்.

லக்ஷிமி கவி.

மாமுனிதானுரைக்க மங்கைலக்ஷிமியாள்தானெழுந்து
வானவர்தான்மகிழ வஞ்சியாளுமேதானடந்தாள
வேசியோதாசியாளோ யெந்தன்வேதனையேமயக்கி
பேசியேநிற்குமிடமிப்போ பெண்மணியாள்கண்டறியவேண்டும்

கிருஷ்ணமூர்த்தி தரு.

கொஞ்சுங்கிளிரஞ்சிதமே கோதையாளே நானும்சென்று
வஞ்சியாலெனைதேடுவாள் ரஞ்சிதமேபோய்வாரேண்டி கொ

சந்திரப்பெண் தரு.

வஞ்சகமாயென்னைச்சேர்ந்து சஞ்சலப்படவேவைத்து
பஞ்சவர்னகுழந்தையை பத்தியேயெடுத்தூச்செல்லு வஞ்

லக்ஷிமி வேறு தரு.

மன்னவரேயிதுமார்க்கமா மாதைநீசேர்ந்திடயோர்குமா
என்னமதியாலே இவ்விடம்வந்தீரோ
கன்னியெனைவிட கபடகம்வைத்தீரோ மன்

கிருஷ்ணமூர்த்தி தரு.

நானென்றறியனே கண்மணி நாயகியாளாரோ பெண்மணி
யேனேயிங்கவாறு என்னிடம்பேசாதே
வீணாவார்த்தைகள் விளம்பிநீவீசாதே நா

சந்திரப்பெண் தரு.

ஏண்டியெந்தனிட்டாதனே யிழுக்குராயென்னடிபோதனே
தாண்டிதாண்டிவந்து தையலேகுதிக்காதே
ஆண்டவரேநீரும் அவளிடம்போகாதே ஏண்

லக்ஷிமி தரு.

சாடுமாரிநீயும்பேசாதே சதிகாரிவுன்கையைவீசாதே
யேடாகூடமாக என்னிடம்பேசினல்
தாடையிலேநானும் போடுவேன்பாரடி சாடு

சந்திரப்பெண் தரு.

என்னுங்காணுமிவளிடித்திட எட்டிநீயும்நின்றுபார்த்திட
கன்னக்குறவனே கலகங்கள்செய்திட்டாய்
என்னமதியாலே எந்தனைகெடுத்திட்டாய் என்

கிருஷ்ணமூர்த்தி தரு.

புத்தியில்லாமலேபேசுராய் கற்றதெல்லாம்வந்துவீசுராய்
என்-சித்தத்திற்குயேற்ற சேல்விழியோச்சே
அத்துமீரிசெய்த அரிவையைநீயேசும் புத்

லக்ஷிமி தரு.

தந்திரவார்த்தைகளாடுரீர் யிந்த தட்டுவாணியுடன்பேசுரீர்
குந்தகமெண்ணமல் குலத்தைக்கெடுத்தீரே
சிந்தைநோகாமலே சிரிக்கியிடம்சொல்லும் தந்தி

கிருஷ்ணமூர்த்தி தரு.

கண்டபடியெனேபேசாதே கொண்டமனைவியும்நீயாச்சே
எண்டிசைதன்னிலே கண்டால்நகைப்பாரே
சண்டைகள்போடாதே சமுசாரிநீயாச்சே கண்

நாரதர் கவி.

இதுவொருகலகமில்லா யிருக்குதுவேறதர்க
துதிபெரும்பரமன்தேவி தோகையையழைத்துநானும்
சதிபெறயிவர்களைநான் சண்டையும்மூட்டிவைப்பேன்
கதிபெரும்கலைநோக்கி களிப்புடன்செல்லுவேனே.

பொது வசனம்.

இவ்விதமாக லக்ஷிமியை அழைத்துக் கொண்டுபோய் பகவானிடம் விடவும் அங்கே கிருஷ்ணமூர்த்தியும் சந்திரப்பெண்ணும்

இருப்பதை லக்ஷிமிதெரிந்து அவர்களிடம் வர்துசெய்துபிருக்க நாரதர் கயிலைநாடி வருகின்றபோது ஈஸ்பரி கொலுவர்க வருவது.





ஈஸ்பரி கவி.

ஆனையையுரித்தபாதன் அவரிடபாகம்பெற்ற
மானையேகரத்திலேந்தும் மகாதேவன்தன்னைத்தேடி
தேனெனும்மொழிக்கொப்பான சேடியருகில்சூழ
தானவரடிவணங்கும் தையல்பார்வதியும்வாராள்.

ஈஸ்பரி தரு.

உலகில்சீவமாந்தர்க்கெல்லாம் வுயர்கருணை தருகும்மாதா
விலகில்லாசமயம்வாய்ந்த வித்தகிவாராள்
ஈசனார்தனக்குபாரி யெங்கிலும்நிறைந்தசொரூபி
தேசத்தோர்புகழ்ந்துபோற்றும் தேவியும்வாராள்
மந்தாரைமலர்கள்சூடி செந்திருவடிவம்துன்ன
மங்கையருகில்சூழ மயேஸ்பரிவந்தாள்
ஆனைமுகவர்க்குமாதா வேலவன்தனக்குதாயார்
ஆதிவிசாலாக்ஷியான அம்மணிவந்தாள்
அச்சுதனரிமுகுந்தன் அவரிடதங்கையான
பச்சைசிரமேனியான பார்வதிவாராள்
ஊமையெழுத்தின்மீதில் ஒங்கும்ஞானப்பிரகாசி
பூமியில்மாந்தரைக்காக்கும் பூவையும்வாராள் உலகி

ஈஸ்பரி கவி.

யென்னடிபாங்கிமாரே யென்னிடபிராணநாதர்
மன்னவர்தனைக்காணமல் மங்கையும்வாடலானேன்
கன்னியாளரியேனென்றும் கலங்குதேயிந்தன் நெஞ்சம்
பன்னடிவுனதுவாயால் பாவையேயெனக்குநன்றாய்.

ஈஸ்பரி தரு.

செகத்தில்படியளக்க தோழிகளா அம்மா தோழிகளா
சிவனுரைக்காணேனம்மா பாங்கிகளா

பக்தருக்குரக்ஷிதர பாங்கிகளா அம்மா பாங்கிகளா
பரமர்வரவும்காணேன் சேடிகளா

அசுரர்க்குவரம்கொடுத்து தோழிகளா அம்மா பாங்கிகளா
அகப்பட்டுதவிக்கின்ராரோ தாதிகளா

எனக்குமொருயோசனை தாதிகளா அம்மா தோழிகளா
யெடுத்துயெனக்குசொல்வாய் பாங்கிகளா செ

பொது வசனம்.

இவ்விதமாக பார்வதி பரமசிவனைக் காணாமல் தாதிகளிடம் பேசிக்கொண்டிருக்க நாரதர் கயிலைநாடி வருவது.

நாரதர் தரு.

கயிலையங்கிரிதேடினேன் வொயிலாய்ராகம்பாடினேன்
இருவருக்கும்கலகத்தை யெடுத்துசொல்வேன்மார்க்கத்தை
இவர்களுக்குசண்டையை பிடிக்கச்செய்வேன்கொண்டையை
கலகபுரியனென்றனர் கயிலையங்கிரிசென்றனர்
உலகமெல்லாம்திரிந்தனர் உத்தமியேகண்டனர் கயி

நாரதர் தரு.

அத்தனிடபாகம்பெற்ற உத்தமியேயெந்தன்தாயே
பத்தியாபாதம்பணிந்தனே எந்தனைக்காரும்
நத்தியே நாரதன்வந்தனம் அத்த

ஈஸ்பரி தரு.

நத்தியேயென்னிடம்வந்த நாரதனேவாழ்ந்திருப்பாய்
வித்தகியாளென்னைத்தேடியே வந்ததென்ன
உத்தமசேதிசொல்லும் நாடியே நத்

நாரதர் தரு.

செஞ்சடையோன்தன்னைத்தேடி வஞ்சியரேவந்தேன்நானே
தஞ்சமென்றுபாதம்பணியவே அவரைநாடி
தையலரே வேறொன்றில்லையே செஞ்

ஈஸ்பரி தரு.

ஆடரவம்பூண்டவரை தேடிவந்தக்காரணமேன்
கோடிமூட்டைக்கொண்டுவந்தாயோ நாரதனே
ஓடியிங்கு வந்துநின்றாயோ ஆட

நாரதர் தரு.

மூட்டைக்கொண்டுவல்லையம்மா பாட்டியரேயெந்தன்தாயே
வாட்டமுடன்யெங்குச்சென்ருரோ பரமனரும்
வல்லவியே யெனக்குவிள்ளுவாய் "மூட்

ஈஸ்பரி தரு.

விள்ளுவேநானுந்தனுக்கு வல்லவரும்மூன்றுநாளாய்
தொல்லுலகில்படியளக்கவே யெனதுபேரா
துரிதமாகவே சென்ருர்தேரவே விள்ளு

நாரதர் தரு.

படியளக்கச்சென்றகர்த்தன் பாவையாளுடனேசேர்ந்து
பாலகியைபெற்ருரம்மணி யதைவுனக்கு
பகர்ந்திடவே வந்தேனன்மணி படி

ஈஸ்பரி தரு.

பகர்ந்திடும்வார்த்தையது பாருலகிலடுக்குமோதான்
பகட்டிடும்வார்த்தைவொப்பேனே அடாசதிநாரனே
பாவியதை வுரைக்கவேண்டாமே பகர்ந்

நாரதர் கவி.

உரைக்கவும்வேண்டாமென்ற உத்தமிதாயேகேளாய்
திருக்குகள்செய்தாரீசன் திகம்பரிநீயரிந்திடாமல்
உருக்கமாய்வுந்தனுக்கு உள்ளதுசொல்லவந்தேன்
சுருக்குடன்நீயும்சென்று சுந்தரர்தனையழைப்பாய்.

ஈஸ்பரி கவி.

கண்மணிநாரதாகேள் கர்த்தனுரெவ்விடத்தில்
நன்மணியுடனேகூடி நாரியரிருக்கின்ருரோ
பெண்மணியென்னசாதி பேதையைபார்க்கவேண்டும்
வண்ணமாயெந்தயிடந்தான் வழிதனைக்காட்டுவாயே.

நாரதர் தரு.

சத்தியேநீயும்நடந்துவாருமே பத்தியாநாமும்கர்த்தனைதேடி
உத்தமியெட்டிநடப்பாய் தூரமே சத்தி

ஈஸ்பரி தரு.

வழிதானெத்தனைதூரம்சொல்லுவாய்வஞ்சியாளுமேகொஞ்சியேநடக்க
அஞ்சுதேமனதுவாடி யென்செய்வேன் வழி

நாரதர் தரு.

வந்தோம்வெகுதூரம்தாண்டி யன்னையேவிந்தவனத்திலுர்கனுதரும்
மைந்தரோடிருப்பதை நீபாருமே வந்

ஈஸ்பரி தரு.

புத்திரர்தனையீன்ருராநாரதா புண்ணியரிடம்கன்னியாள்சென்று
புலம்மதையரிந்துவாரேன் சீரதா புத்

நாரதர் கவி.

சென்றுமேவாருமம்மாள் சீக்கிரமாகநீயும்
நின்றுமேயிவ்விடத்தில் நேர்மையாயிருப்பேன்தாயே
கன்றுமான்யேந்துமீசர் கர்த்தரைபாருமம்மாள்
மன்றுளான்பரமன்சேதி மாதேவியரிந்துவாராய்.

ஈஸ்பரி தரு.

நாரதர்சொல்படிக்கு நங்கைபார்வதியும்தானடந்தாள்
நேராககண்ணில்கண்டுமையாளும் நேர்த்தியதாகவேதானடந்தாள்
கொந்தார்குழலியாருமிந்த கொற்றவரைக்காணதானடந்தாள்
யெந்தவிதம்சொல்வாரோ யேகிபரமரைக்கேட்கலுற்ருர்

ஈஸ்பரர் தரு.

மாதரசேமாங்குயிலே மங்கையெந்தன்பார்வதியாள்
வாதனையாய்பேசுவாளே வஞ்சியரேபோய்வரண்டி மா

சந்திரப்பெண் தரு.

சூதாகயென்னைச்சேர்ந்து சுந்தரியாள்துயரப்பட
வாதைசெய்யும்குழந்தைதன்னை வள்ளலேயெடுத்துசெல்லும்

ஈஸ்பரி தரு.

என்னுமதியாலே மன்னவரேவந்தீர்
ஏற்குமோவுமக்கிதுநாதா மார்க்கமோவுலகுக்குபாதா
சின்னசாதியான கன்னியைசேர்ந்திட
சித்தத்திலெண்ணிணீர் வுத்தமாயெழுந்திரும் என்

ஈஸ்பரர் தரு.

ஆரோயரியேனே பேரும்தெரியேனே
ஆசைக்கிசைந்தயென்மானே யவகேடுசொல்லாதேதேனே
தாறுமாராகவே தையலேபேசாதே
பாரோராரிந்தாலே பரிகாசம்சொல்லுவார் ஆரோ

சந்திரப்பெண் தரு.

தாண்டவமாடிடும் ஆண்டவரேநாதா
தந்திரவார்த்தைகள்பேசுரீர் தையலாரோவென்றுவீசுரீர்
நீண்டக்குழலாளும் தீண்டியிழுக்குராள்
ஏண்டிபிடிக்குராய் யென்னிடநாதனை தா

ஈஸ்பரி தரு.

நாடெங்கும்திரிந்திடும் சாடுமாரிபோல
காதனையிழுக்குராய்போடி சாதனைபேசாதேவாடி

மூடமதியாலேதேடி யென்நாதனே
முட்டிமுட்டிபேசுராய் தட்டுவேன்பல்லையும் நா

சந்திரப்பெண் தரு.

தட்டுவேனென்றுபல்லை யெட்டியேயடிக்குராள்
கிட்டவேநிற்குறீர்நாதா வுந்தன்வாடிக்கையோயிதுவேதா
கெட்டிக்காரிவுன்கொண்டையை யெட்டுபிடித்தேனடி
கொட்டுவேன்தலைமேலே தட்டுவாணிபோடி தட்

ஈஸ்பரன் தரு.

அன்னமேயிருவரும் யென்னைமதியாமலே
அடித்துக்கொள்வதுநீதியா யரிவையரேயென்னுமதியா
கன்னியேபார்வதியே யன்னீதமாகவே
என்னமாபேசுராய் சின்னதனமுமாச்சே அன்ன

நாரதர் தரு.

அம்மம்மாயிவ்விடம்சண்டை அடித்துபிடித்திரேகொண்டை
பெம்மானும்நின்றிட பேதையர்கூடியே
வம்புவார்த்தையென்னுவளர்த்தினீர் சண்டையை அம்

ஈஸ்பரன் தரு.

குண்டுணிவுந்தனுலல்லவோ கோள்கள்நடார்ந்ததுமில்லவா
வண்டணிமாதர்கள் வம்புசண்டைபோட
உண்டுபண்ணிவைத்த உளவனும்நீயாச்சே குண்டு

நாரதர் தரு.

நீலமேகாயிங்கேவாருமே நிந்திக்கிறுர்சிவன்பாருமே
யாராலேவந்தது அய்யனேநீர்சொல்லும்
சீராய்கனிபார்க்க சிவனுரேயழைத்தேனே நீல

கிருஷ்ணமூர்த்தி தரு.

யோக்கியன்நீதானே அடடா வுன்வார்த்தையினிசும்மாவிடடா
போக்கிரிசொல்லாதே யேற்குமேயென்காதில்
சீக்கிரமாகவே செல்லடாயப்புரம் யோ

நாரதர் தரு.

மைத்துனரும்நீரும்கூடியே பெற்றீர்களேயிரண்டுபிள்ளையே
உத்தமாயுனக்காணும் பித்தர்க்குபெண்ணுதான்
பத்தினிதாய்மாரே யிந்த புத்திரரைப்பாருங்கள் மை

லக்ஷிமி தரு.

அண்ணவேயிதுநல்லமார்க்கமா ஆர்செய்வார்வுலகத்தில்யேற்குமா
நண்ணுமிருக்குதா நடத்தைசரிதானு
எண்ணுதும்யெண்ணியே யென்மனம்குண்ணுதே அண்

ஈஸ்பரி தரு.

கூடப்பிறந்திட்டஅண்ணாவே யிந்த குவலையம்நகையாதாநண்ணாவே
வாடுதேயென்மனம் வஞ்சியாளென்செய்வேன்
நாடெங்கும்தெரிந்தாலே நமக்கேயிழிவாச்சே கூடப்

சந்திரப்பெண் தரு.

யெந்தனிடதுயர்தீரவே நான் வந்துபணிந்தனேதேரவே
கந்தமணிந்திடும் கன்னியாளென்றென்னை
நிந்தனைசெய்தீரே நேரிழையென்செய்வேன் யெ

நாரதர் தரு.

அய்யய்யோபெண்பாவமாச்சுதே யிந்த அரன் அரியாலேயேபோச்சுதே
நய்யுதேகுழந்தைகள் நயினாவென்றழைக்குதே
மெய்யதாய்சொல்குரேன் மெல்லியேபாருங்கள் அய்

லக்ஷிமி தரு.

புண்ணியரேநீரும்வாருமே போகலாம்வைகுந்தம்யேகுமே
வண்மையாய்நின்றாலே வகைமோசமாகுமே
பெண்ணாளைவிட்டுமே பிரிந்துநாம்செல்லுவோம் புண்

ஈஸ்பரி தரு.

கண்ணாளரேயிங்குநீருமே கையிலைக்குச்சொல்லுவோம்வாருமே
அண்ணலேநின்றாலே யவகேடுநேர்ந்திடும்
இன்னாளேயிருவரும் யிப்பவேசெல்லுவோமே கண்ணா

சந்திரப்பெண் தரு.

மதலையைத்தூக்கியேசெல்லுங்கள் இந்த மங்கைக்குவழியென்னவிள்
தலைவிதியோயிது தாண்டவாயென்செய்வேன் [ளுங்கள்
அலையுதேயென்மனம் அருமுனிநாரதா மதலை

நாரதர் தரு.

தாயாரேயிருவரும்வாருங்கள் இந்த தையலுக்குபதில்கூறுங்கள்
வாயாலேசொன்னது வகைமோசமாச்சுதே
காயாம்பூவண்ணனே கருத்தென்னசொல்குறீர் தா

கிருஷ்ணமூர்த்தி கவி.

கருத்தனைதகேட்கவந்த கலகநாரதனேகேளாய்
வருத்தங்கள்நேர்ந்ததெல்லாம் வகையதுவுந்தனாலே
திரித்ததோர்மழுமானேந்தும் தயாபராமைத்துனாகேள்
பொருத்தமாய்நாமும்கூடி புலமதையரியலாமே.

ஈஸ்பரர் கவி.

புலமதையரிவோமென்ற புனிதரேசொல்லக்கேளும்
நலமதைதெரிந்துக்கொள்வோம் நாரதமுனிவனாலே

தலமதில்கலகம்செய்த தவமுனிதன்னையிப்போ
பிலமதாய்கலங்கச்செய்தால் பிரித்துரைசெய்குவானே.

லக்ஷிமி தரு.

சண்டாளபடுபாவிவுன்னாலே சங்கடம்நேர்ந்ததயின்னாளே
திண்டாட்டபடசெய்தாய் திரம்கொண்டுநீயும்
விண்டிடசொல்குவாய் விபரமதாகவே சண்

நாரதர் தரு.

விபரத்தைசொல்கிறேன்கேளுமே வித்தகியேமனந்தாளுமே
துயரம்கொண்டுமந்த திருச்சங்குராசனும்
அகோரதபமது அன்னையேசெய்குரான் விப

லக்ஷிமி தரு.

யேதுக்குதபமதுசெய்குரான் சூதாகவேநீயும்வுய்குராய்
பாதகனேநீயும் மாதுக்குசொல்குவாய்
தீதொன்றுமில்லாமல் தெரிந்திடபுல்குவாய் யே

நாரதர் தரு.

புல்குவேன்கேளுமேஅம்மணி பிள்ளையில்லாதலேநண்மணி
அல்லல்படுகிறான் அய்யோத்திராசனும்
தொல்லையைநீக்காமல் சுவாமியுமரந்தாரே புல்

ஈஸ்பரி தரு.

குடிகெடுத்தப்படுபாவியே இந்த குறைகள்வந்ததுன்னால்மேவியே
அடியெடுத்தாயேநீ ஆங்காரம்கொண்டுமே
சடிதியில்சொல்லடா சண்டாளாகுருதுரோகி குடி

நாரதர் தரு.

சதிகாராயென்கிறாய் அம்மணி சற்றேமனம்தாளும்பெண்மணி
மதிதயராசனும் மகாதபம்செய்கிரான்
அதினாலேயல்லவோ அம்மணிநடந்தது சதி

ஈஸ்பரி தரு.

என்னத்திற்காகவோசெய்கிறான்தபம்சொன்னால்சரிநானும்முய்குவேன்
சின்னாபின்னமாக சீச்சிநீசெய்தாயே
சன்னுசிதன்னிலே சண்டாளன்நீதானே என்

நாரதர் தரு.

விள்ளுவேன்கேளுமே அம்மணி வேலவனையீன்றநண்மணி
பிள்ளையில்லாதாலே பெரும்தபம்செய்குரான்
வள்ளல்சிவனாரும் மறந்தாரேவுன்னாலே விள்

கிருஷ்ணமூர்த்தி கவி.

மறந்ததுவாஸ்த்துவந்தான் மாமுனிநாரதாகேள்
தெரிந்திடநாமதேயம் தேவர்களறியவேண்டும்

புரிந்திடயெங்களுக்கு பேருதான்யின்னதென்று
விரிந்திடவைக்கவேண்டும் விபரத்தையரிவிப்பாயே.

நாரதர் கவி.

நித்தியம்பிர்ம்மாச்சாரி நேர்த்தியாயானதாலே
சித்தமாய்சிருவனுக்கு சீருடன்நாமதேயம்
பத்தியேமாலும்சந்திரன் பாசமாய்சேர்ந்ததாலே
வெத்தியாயரிச்சந்திரனென்று விளங்கிடவைத்தேன்கண்டீர்.

ஈஸ்பரன் கவி.

பேரனேநாரதாகேள் பிறந்திட்டபெண்தனக்கு
கூருவாய்நாமதேயம் குவலையமரியத்தானே.

நாரதர் கவி.

சங்கராநீரும்சந்திரன் சரசங்கள்புரிந்ததாலே
பொங்கமாய்பெண்சிசுக்கு பெயர்சந்திரவதியாள்தானே

லக்ஷிமி தரு.

மதலைக்குநாமதேயம்மகிக்ஷியாய்வைத்தாயே நாரதா நாரத
புதல்வனெங்கிருப்பதுபிரித்துரைசெய்குவாய் சீரதா சீரதா

நாரதர் தரு.

உரைசெய்குவேனம்மாவுத்தமன்திருச்சங்கு அன்னையே அன்னையே
பிரியமாயவரிடம்பிள்ளையைவிடவேண்டும் முன்னையே முன்னையே

ஈஸ்பரி தரு.

புதல்விக்குநாமதேயம்புண்ணியாவைத்தாயே நாரதா நாரதா
சுதனிவளர்வதெங்கேகுக்ஷத்தைவிள்ளுவாய் சீரதா சீரதா

நாரதர் தரு.

கன்னமாபுரியாளும்மன்னனும்மதிதயன் அன்னையே அன்னையே
நன்னயமாகவே நலமுடனே வளர்ப்பான் பின்னையே பின்னையே

கிருஷ்ணமூர்த்தி தரு.

என்னமாய்குழந்தைகளெப்படிபோவது சொல்குவாய் சொல்குவாய்
பின்னமில்லாமலே பிரிந்திடயெனக்கிதை விள்ளுவாய் விள்ளுவாய்

நாரதர் தரு.

அந்தமுள்ளவாய்வு அவரிடம்தந்தாலே அய்யனே அய்யனே
குந்தகமில்லாமல் கொண்டுபோய்சேர்ப்பாரே மெய்யனே மெய்யனே

ஈஸ்பரன் தரு.

உள்ளத்திலொருவிதம் கொள்ளுதேயோசனை நாரதா நாரதா
பிள்ளைக்குதிருமணம் பிரியமாசெய்யனும் சீரதா சீரதா

சந்திரப்பெண் தரு.

ஒருதாய்வயற்றிலே இருபிள்ளைபிறந்திட அய்யனே அய்யனே
திருமணம்செய்திட தேவரேயடுக்குமோ மெய்யனே மெய்யனே

நாரதர் தரு.

மைத்துனன் அத்தானும் மருவிக்கூடினதாலே அம்மணி அம்மணி
பத்தியதிருமணம் சித்தமாய்நடத்தலாம் பெண்மணி பெண்மணி

ஈஸ்பரர் கவி.

திருமணம்செய்வதற்கு தேவர்களரியவேண்டும்
பெருமைசேரிந்திரனும் பிர்மனுமனேவோர்தானும்
ஒருமையாய்பலதேவர்கள் ஒருமிக்ககூடிபிங்கு
அருமணம்தனைநடத்தி அவரவரிடம்செல்லுவோமே.

வசனம்.

கேளுமப்பா நாரதா இந்த விந்தைவனத்தில் முப்பத்து முக்கோடி தேவர்களும் நார்ப்பத்து எண்ணுயிரம் ரிஷிகளும் அஷ்ட திக்குபாலகரும் கின்னரர்கிம்புருடர் கருடகாந்தருவர் சித்திவித்தியாதரர் தேவர்கள் எல்லோரும் வந்துவிட்டபடியால் இனிமேல் பந்தல்களை அலங்கரித்து எல்லாசாமக்கிரிகைகளை தயார்செய்துவிட்டபடியால் குழந்தைகளுக்கு திருமணம் நடத்தலாம் நாரதமுனிவனே.



கலியாணம் தரு.

தேவர்களெல்லோரும்கூடினார் திருமணம்செய்யவேநாடினார்
மறையவர்மந்திரமோதினார் மல்லிகைபந்தலும்பூட்டினார்
கலதேவரும்மனமேத்துமே சாலும்கறகங்கள்வைத்துமே

அரசாணிகாலதைநட்டனர் அம்மிவலமாகவைத்தனர்
பெண்ணுக்கும்தாலியும்கட்டவே புகக்ஷியாய்வாத்தியம்தட்டவே
வந்தரிஷியோரும்வாழ்த்தவே வாரிவாரிசேஷைதூத்தவே
பாலும்பழமதைஊட்டினர் பலதேவரும்கண்டுவாழ்த்தினர் தே

கிருஷ்ணமூர்த்தி கவி.

அஷ்டதிக்குதேவர்களில் வாய்வுதன்னை
அழைத்துமேபவநாசன் குழந்தைதன்னை
இஷ்டமுடனெந்தனையே தோத்தரிக்கும்
இயலான திருச்சங்கு தபத்தின்முன்னே
பக்ஷமுடன்கலிதீர விட்டுநீரும்
பரிதிகுலம்தழைத்திடவே யிவனைநேரும்
தக்ஷணமேமதலைதனை எடுத்துச்செல்லும்
தாரணியிலய்யோத்தி ஆள்வான்தானே.

ஈஸ்பரர் கவி.

அப்பனே வாய்வுதேவா அரைநொடி தன்னில்நீயும்
செப்புவே நிதனைக்கேளும் செல்வியாள் புத்திரிதன்னை
தப்பில்லா மதிதயராசன் தபசிலே முன்னதாக
செப்பினேன் விட்டுவாரும் சுந்தரர் வுறைத்திட்டேனே.

ஈஸ்பரி தரு.

அன்பருக்கு காக்ஷிதரும் ஆண்டவரே எந்தன்நாதா
இன்பமுள்ளக் குழந்தை இருவரும் கூடுவதெப்போ அ

ஈஸ்பரன் தரு.

மடைந்தையான காலத்தில் மதிதயன் சுயவரம்
மணவோலை தெரிவிப்பான் பார்வதியே

லக்ஷிமி தரு.

தெரிவித்த காலத்தில் திருமங்கிலியம் கழுத்தில்
தோற்றுமே அரசர்க்கு மன்னவரே தெ

கிருஷ்ணமூர்த்தி தரு.

அணிந்திட மங்கிலியம் அரிச்சந்திரன் தவிர
யாருக்கும் தெரியாது லக்ஷிமியே அணி

ஈஸ்பரர் வசனம்.

கேளும் பெண்ணே பார்வதா! தங்கையாகிய லக்ஷிமியே! இந்த பிள்ளைகள் ஒருமிக்கக்கூடுவது யெப்படியென்றால் மதிதயராசனிடம் இந்த பெண் குழந்தை வளர்ந்து மடந்தையான காலத்தில் அன்பத்தாறு தேசத்து ராசர்களுக்கு மணவோலை தெரிவிப்பான் அப்போது ராசர்களெல்லாம் மணக்கோலத்திற்கு வரப்போறார்கள்

அந்தகாலத்தில் திருச்சங்குராசனிடம் வளரப்பட்ட அரிச்சந்திரன் வரப்போகின்ருன் இவன் கண்ணுக்கு இந்த மங்கிலியம் தோற்றும் மற்ற அரசர்களுக்கு புலப்படாது அப்போது இந்த பரமரகசியம் அரிச்சந்திரன் அரியபோகின்ருன் இவனுக்கு அந்தப்பெண் சந்திரமதி பாரியாளாகப் போகின்ருள் அந்தக்காலத்தில் தெரிந்துக்கொள்ளுங்கள் இனிமேல் அவாளவாளிருப்பிடம் செல்லுவோம் மைத்தனு.

சந்திரப்பெண் தரு.

அந்திப்பொழுதாகுதே சந்திரன்செல்லவேண்டும்
நந்திவாகனரே நாரணரேயென்செய்வேன்

சுரு நத்தியேவானுக்கு பத்தியாய்போக
இத்தனிலே உத்திரவளிப்பீர் அந்தி

ஈஸ்பரர் தரு.

சந்திரனென்குராய் வுந்தனிடநாமதேயம்
இந்ததோர்பெண்வடிவம் வந்தகாரணம்யென்னு

சுரு யெப்படியெனக்கதை வொப்புவேன்சொல்லும்
அற்புதமயிலே இப்பவேவிள்ளும் சந்தி

சந்திரப்பெண் தரு.

விள்ளுமென்றுசொல்கிராய் வள்ளலேயுரைப்பேன்கேளும்
மெள்ளப்பூங்காகுளத்தில் கள்ளமில்லாகுளித்தேன்

சுரு மெத்ததோர்மன்னனும் உத்தமன்கன்னியானேன்
புத்திகலங்கியே சித்தமும்வாடினேன் விள்ளு

கிருஷ்ணமூர்த்தி தரு.

சித்தமும்நெந்தேனென்று வித்தகியேசொல்லவந்தாய்
சேதியைமுன்னதாக பேதையேசொல்லொண்ணுதா

சுரு சித்தினியாளே பெண்புத்திபின்புத்தியென்பர்
மத்திபமாமனதில் வைத்துமேயிருந்தாய் சித்த

சந்திரப்பெண் கவி.

வந்துநான்தீர்த்தமாடி வனிதையாளானபின்பு
தந்திரநாரதனுலிப்போ தர்ப்பராதெரியுமென்று
சிந்தையிலரிந்துக்கொண்டு செப்பாமலிருந்துவிட்டேன்
பந்தமாய்சாபம்தன்னை மரந்தாமாநீக்குவீரே.

கிருஷ்ணமூர்த்தி கவி.

கச்சிதநாரதாகேள் கனமுனிகும்பன்தன்னை
அச்சுதனழைத்தாரென்று அவரிடமுரைத்தாயானுல்
மெச்சியேயவர்தன்வாக்கை மெய்யதைதெரிந்துக்கொண்டு
உச்சிதசாபம்தன்னை வுத்தமாதீர்க்கலாமே.

நாரதர் கவி.

கதித்திடும்முனிவர்தம்மை கண்டுமேநாரதன்தான்
உதித்திடும்வாக்குத்தாரம் வுயர்முனியவரைக்கண்டு
விதித்திடும்வாமனுந்தான் விரைவினிலழைக்கச்சொன்னர்
மதித்திடும்முனிவரேநீர் பர்மத்தையரிந்திடீரே.

கும்பமுனி தரு.

நாற்பத்தெண்ணுயிரம் நலமுள்ளரிஷிகளில்நம்மை
நாடியழைத்ததென்ன நாரதனே நாற்

நாரதர் தரு.

அழைத்தவரிடம்சென்றல் அதின்விபரம்தெரியும்
அருகேபோய்கேட்டுவாரும் முனியோனே அ

கும்பமுனிவர் தரு

உந்தன்வார்த்தைபடிக்குவந்துமே கண்டுகொள்வேன்
உலகமெல்லாமரிந்த நாரதரே உ

நாரதர் தரு.

சந்தேகம்கொள்ளவேண்டாம் சனுதியாகநீரும்
சங்காழியோனிடம்செல்லும் முனியோரே சந்

கும்பமுனிவர் கவி.

கொண்டிடுமுடவனுக்கு கொம்புதேன்கிடைத்தாப்போலே
கண்டிடுமடியாருக்கு காக்ஷியையளிக்கும்தேவா
கெண்டிகையேந்துமிந்த கேவலன்கும்பன்தன்னை
விண்டிடயழைத்ததென்ன விளம்புவீர்போற்றிபோற்றி.

கிருஷ்ணமூர்த்தி கவி.

அழைத்ததோர்விபரம்சொல்வேன் அப்பனேகும்பாவாழி
இழைத்ததோர்படிகுளத்தில் இவனென்னசெய்தான்சந்திரன்.

கும்பமுனிவர் கவி.

தழைத்ததோர்புஷ்பமெல்லாம் தானதைநாசமாக்கி
குழைத்திடசலத்தைதானும் குளமதையதம்செய்தானே.

கும்பமுனிவர் வசனம்.

கேளும் சுவாமி வைகுந்தவாசரே இந்த விந்தைவனத்திலுள்ள பூசைக்குரிய புஷ்பங்களையெல்லாம் கொய்ததுமன்னியில் பரமக்கடவுளை நோக்கி அனேககாலம் தபம்செய்து அவருடைய அருளினல் யேர்ப்பட்ட குளத்தை அதம்செய்து கலக்கினவர்கள் யாரோ அவர்கள் ஆடவராகயிருந்தால் பெண்ணுகவும் பெண்ணுகயிருந்தால் ஆணுகவும் போகும்படி சாபமிட்டது உண்மைதான் அந்த சாபம் இவனை வாய்த்தது தேவரீர் உத்தாரப்படிக்கு நடக்கின்றேன் சுவாமி.

கிருஷ்ணமூர்த்தி வசனம்.

கேளும் முனிவரே நாங்கள் எல்லோரும் நீ செய்த புண்ணிய வசத்தினால் இந்த விந்தைவனத்தில் உன் கண்ணுக்கு புலப்பட்டோம் இனி இந்தவனம் செழித்தோங்கும்படி வரம்பாலித்தோம் உனக்கு அனேக ஆசீர்வதித்தோம் இந்த சந்திரன் செய்த குற்றத்தை மன்னித்து எப்போதும்போல் வானுலகம்செல்லும்படி இந்த பெண் உருவை நீக்கி புருஷவடிவாக அருள்செய்யும் முனிவரே.

கும்பமுனிவர் கவி.

கேசவன்வாக்குத்தாரம் கேட்டுமேகும்பன்தானும்
நாசமுன்செய்தசந்திரன் நலமுள்ளபுருஷனாக
வாசவனருளினாலே வடிவத்தைதந்தேனிப்போ
கூசாமல்வானுலோகம் கொற்றவாசெல்லுவாயே.

ஈஸ்பரன் கவி.

கும்பனேசொல்வேன்கேளும் குணமதாயுந்தனுக்கு
நன்பனேநாரதாநீயும் நாடியேபூலோகந்தன்னில்
இன்பனேமற்றதேவர் யாவரும்சொல்லொண்ணாது
அன்பரேமர்மமாக அவரவரிடம்செல்வோமே.

பொது வசனம்.

அகோ தெப்படியென்றால் இந்தப் பிரகாரமாக அரிச்சந்திரனுக்கும் சந்திரமதிக்கும் தேவர்களறிய சிசுவதிலேயே திருமணம் முடித்து பிள்ளை இல்லாமல் தபசிலையிலிருக்கப்பட்ட அயோத்தியாபுரியையாளப்பட்ட திருச்சங்கு மகாராஜனிடம் அரிச்சந்திரனையும், கன்னமாபுரியை யாளப்பட்ட மதிதேப மகாராஜனிடம் சந்திரமதியையும் வாயுதேவரால் விடப்பட்டு சந்திரனுக்குக் கும்பமுனிவரால் ஏற்பட்ட சாபத்தைத் தீர்த்து வானுலகம் சேர்ந்தார். இதை யாடினபேரும், பாடினவரும் பாடி பாடக் கேட்டானந்தித்தோரும் பரலோகத்திற் குரியவராவாரென்பதாம்.

மங்களம்.

வாழி விருத்தம்.

பூவேறு கோன்வாழி புள்ளேறு மால்வாழி
சேவேறு சடையோன்வாழி செல்வி கலைவாணிவாழி
பாவேரிப் பாடினோரும் பார்த்தவ ராடினோரும்
பேர்பெற யச்சிட்டோரும் பெருமையும் வாழிதாமே.

சந்திரமதி கலியாண மென்னும்
சந்திரன் கெர்வபங்க நாடகம் முற்றிற்று.

கூடலூர் தாலுக்கா திருத்துரையூருக்கடுத்த கொரத்தி கிராமம்

ம-ா-ா-ஸ்ரீ நாராயணசாமிக் கண்டர் குமாரர்

**கந்தசாமிக் கண்டர் இயற்றிய**

**சாற்றுக்கவி.**

இந்திர தேவர்போற்றும் யீசர்க்கு அடியாரான
சந்திரவதியாள் காதை சரிதையாய் நடிக்கவேண்டி
பந்தமாய் நாகரத்னம் பாடினோர் வீரப்பதாசன்
மந்திரகுலத்தோன் சம்பு மரபில்வந் துதித்தோர்தாமே.